*Ūl̲iyan̲*

*Malar 6, ital̲ 42*

*June 22, 1926*

Record no. 148

சென்னைப் பதிவு எண் கரு௦௬. | தனி இதழ் விலை அணா ஒன்றரை | தந்தி விலாசம்:—"OOLIAN".

# ஊழியன்

சந்தா விபரம்.

| | |
|---|---|
| வருடச் சந்தா ... | ௫—0—0 |
| ஆறுமாதச் சந்தா ... | ௩—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ௬—0—0 |

செவ்வாய்தோறும் நிகழ்வது.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

விளம்பர விகிதம்.

அங்குலம் ௧-க்கு வாரம் ௧-க்கு 0—அ—0
நீதிமன்ற விளம்பரம் அங். ௧ ௧—0—0
ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக் காரியஸ்தருக்கு எழுதவும்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் ௩. காரைக்குடி. அட்சய-வருஷ ஆனி-மீ அ-வ (௨௨—௬—௨௬) இதழ் ௪௨.

## மலர் மணம்.

### பயமும் பக்தியும்.

(வ. ரா. எழுதியது.)

"அவன் பய, பக்தி யில்லாத மனிதன்" என்று தெருக்களில், திண்ணையில், எங்கும், எப்பொழுதும், இக்காலத்தில் சொல்லப்பட்டு வருவதை நாம் அனைவரும் கேட்டிருக்கிறோம். இந்த விநோதமான சொல்தொடர் வெளித் தோன்றி யிருக்கும் வகையைக் கவனித்தால், மிகவும் நலமாயிருக்கும், நகைப்புக்கும் இடமா யிருக்கும்; நம்மைப்பற்றி நகைப்புக்கு இட மல்ல.

* * *

மனிதர்களை 'முரட்டுப்பிடியாக' இழுத்துக் கொண்டு செல்வது உருசி. கண், காது, மூக்கு, நா, தோல்—இவைகள் மனிதனைக்கண்ட விடமெல்லாம் இழுத்துச் செல்லுகின்றன. சங்கீதத்தையோ, சண்டைக் கூச்சலையோ கேட்ட காதுகள் மனிதனை குண்டுக்கட்டாகத் தூக்கிச் சென்று, சங்கீதத்தின் இனிமையின் மத்தியில் அல்லது சண்டையின் மண்டை உடைதலின் நடுவில், கொண்டுபோய்வைக்கின்றன. வெகு தூரத்தில் வனப்பைக்கண்ட கண்கள், கால்களுக்கு மிகுதியும் வேலை கொடுத்து விடுகின்றன. இவ்வாறே நாசியும் நாவும் மனிதனுடைய நடமாட்டத்துக்குக் காரணங்களாகி விடுகின்றன. தென்றற் காற்று வரும் திசையை நோக்கி, தோல் மனிதனை இழுத்துச் செல்லுகின்றது: வெப்பத்தில் அகப்பட்டுத் தவித்தால், தோல் மனிதனை நிழலுக்கு அல்லது நீரோடைக்கு அழைத்துச் செல்லுகின்றது. மேற்கூறிய சந்தர்ப்பங்களிலெல்லாம் மனிதனுடைய ஊக்கத்துக்குக் காரணம் அவனுடைய உருசியாகும்.

* * *

வயதில் வளரும் மனிதன் உருசியைத்தவிர, மற்றொரு சாதனத்தையும் தனக்குத் துணையாகவோ, தொல்லை கொடுக்கவோ சேர்த்துக்கொள்ளுகிறான். இந்த சாதனத்துக்கு உணர்ச்சி என்று பெயர். உணர்ச்சிக்கும் உருசிக்கும் வேற்றுமை இல்லை போல ஜனங்கள் பேசி வருவது நகைப்புக்கிடமாயிருக்கின்றது. உருசியின் வேகத்தையும் சக்தியையும் காட்டிலும் உணர்ச்சியின் வேகமும் சக்தியும் மகத்தானவையாகும். உருசி சிறிது காலத்துப் பயிர்; உணர்ச்சி நீண்ட காலத்துத் தூண்டுதல். தின்பண்டங்களின் உருசியை மறக்கக்கூடிய தன்மை படைத்த இளைஞனுக்கு மானத்தின், கௌரவத்தின், சுயமதிப்பின், அவமதிப்பின் உணர்ச்சியை மறக்கவாவது, அடக்கவாவது முடிவதில்லை. மூன்று நாட்கள் உணவின் உருசியை மறக்க வல்ல இளைஞன், காமத்தூண்டுதலின் உணர்ச்சியை தன்னை விட்டு அகலச் செய்ய முடிவதில்லை. எனவே உணர்ச்சி உருசியைக் காட்டிலும் பெரிது, சக்தி படைத்தது.

* * *

உருசியில் வளர்ந்து உணர்ச்சியில் உழன்று தவித்தும், களித்தும் வாழ்ந்து வந்த இளைஞன் அறிவுக்கண் திறக்கப்பெறுகின்றான். இந்த நிகழ்ச்சி அற்புதமான நிகழ்ச்சியாகும். தன்து செயல்கள் யாவையும் உன்னிப்பார்த்து அவைகளைப்பற்றி யோசிக்கத் துவக்குகின்றான் இளைஞன். மண்ணில் நிகழும் சம்பவங்கள் யாவையும் இளைஞன் தனது புதிய சாதனமாகிய அறிவைக்கொண்டு நோக்குகையில், உலகம் வேற்றுமையடைந்து புதுமைப்படக் காண்கின்றது. நல்லது, கெட்டது என்ற புதிய பாகுபாடுகள் துன்பம் இழைப்பதற்கோ, இன்பம் ஊட்டுதற்கோ, தோன்றுகின்றன. உருசியாலும் உணர்ச்சியாலும் மூண்டெழுந்த மனக்குழப்பம், அறிவைக்கண்டு, ஒழுங்கு பெறத் தலைப்படுகின்றது. அறிவு மன இருளை வெருட்டும் வெளிச்சம் என்பது சொல்லாமலே விளங்கும்.

* * *

மேற்கூறிய மூன்று சாதனங்கள் மட்டும் மனிதனுடைய வளர்ச்சிக்குப் போதமாட்டா. உருசி நிமிஷக் கணக்கில் மனிதனை ஆட்டி வைக்கும் சக்தி. உணர்ச்சி, நாள் கணக்கில் வாரக்கணக்கில் மனிதனை வதைக்கும் சக்தி. அறிவினால் மனிதனுக்கு வெளிச்சம் உண்டாகும்; பழைய சந்தேகங்கள் தொலைபலாம்; ஆனால், அவைகளுடன் புதிய சந்தேகங்களும் எழக்கூடும். பன்னிப்பன்னி ஒன்றைப்பற்றி யோசித்தாலும் கூட, எந்தக் காரியத்தை, எப்பொழுது, எவ்வாறு செய்வது என்ற தரிசனமும் எவ்வகையாலும் செய்து முடிக்க வேண்டும் என்ற துணிவும் மனிதனுக்கு, உருசியினால், உணர்ச்சியினால், அறிவினால் ஏற்படுவதில்லை. எனவே செயலுக்கு வேண்டிய சாதனம் சங்கற்பமாகும்.

* * *

சங்கற்பம் என்பது அருமையான சொல், மிகவும் அருமையான சாதனம். சங்கற்பமின்றிச் செய்யப்படும் செயல்கள் யாவும் விகற்பமாய் முடியும் என்று நாம் எல்லோரும் கேள்விப்பட்டிருக்கிறோம். மிகவும் அருமையான சாதனமாகிய சங்கற்பத்தை விளக்க முடன் அறிந்துகொள்ளுவது நமது கடமையாகும். சங்கற்பம் என்பது திரிகடுகம். மூன்று காரமான பொருள்கள் சேர்ந்து சங்கற்பமாகியிருக்கின்றன. தீர்மானம், துணிவு, தெளிவு என்ற முப்பெருங் கருவிகள் சேர்ந்து, சங்கற்பமாகத் தோய்ந்து நிற்கின்றன. தீர்மானமும் துணிவும் தெளிவும் மன முவந்து, மணக்கோலம் பூண்டு, பெற்ற மகவு நமது செல்வச் சங்கற்பமாகும்.

* * *

தீர்மானம், துணிவு, தெளிவு என்ற மூன்றும் வெவ்வேறு இனங்களைச் சேர்ந்தவைகளைப்போலக் காணப்படினும், இறுதியில் இவைகள் யாவும் ஒன்றேயாகும். இவைகள் மூன்றனுள் எதை எடுத்துக்கொண்டாலும், அதை ஆக்கும் தாய்ச்சரக்குகள் இரண்டே. அவைகள் தான் நான் தலைப்பில் கூறிய பயமும் பக்தியும். பயமும் பக்தியும் ஒரே பொருளைக் குறிக்கும் இரண்டு சொற்களைப்போல, இப்பொழுது தவறாக வழங்கப்படுகின்றன. இதற்கு காரணம் ஒன்றேயாகும். நமது தற்போதைய வாழ்வில் தெளிவு என்பது சிறிதுமில்லாமையால், நாம் சொற்களையும் தெளிவின்றி, வேற்றுமைப்படுத்தாமல், கேவலமாக உபயோகப்படுத்தி வருகின்றோம்.

* * *

தீர்மானத்துக்கும் துணிவுக்கும் தெளிவுக்கும் பயமும் பக்தியும் தாய்ச் சரக்குகளாயின், அவைகள் மூன்றையும் ஏன் பிரித்துத் தனித்துக் கூறவேண்டும் எனக் கேட்கலாம். நல்ல கேள்வி. பயம், பக்தி என்று பொதுப்படப் பேசினாலும். அவைகள் மூன்று வகையான தன்மைகளைப் பெற்று இயங்குகின்றன. தெளிவு அறிவு சம்பந்தமானது; துணிவு உள்ளத்தின் உணர்ச்சி சம்பந்தமானது; தீர்மானம் மேற்கூறிய இரண்டையும் கடந்து நிற்கும் சக்தியை. சாதனத்தைத் தழுவியதாகும். எனவே மூவகை பயமும், மூவகை பக்தியும் இருக்கின்றன. வெப்பம் தோலைத்தாக்கினால், நீராட்டம் செய்து தாபத்தைத் தணித்துக் கொள்ளலாம்; வெப்பம் இரத்தத்தில் கலந்து கொண்டால், அது காய்ச்சல்; வெப்பம் நாம்பிலும் எலும்பிலும் சேர்ந்துகொண்டால் அது மரணத்தோடுதான் மனிதனை விட்டு அகலும். எனவே வெப்பம் ஒன்றேயாயினும், அது தாக்குமிடத்தையும் தன்மையையும் பொறுத்து, அதை மதித்து, வகுக்கவேண்டும். அதுபோலவே பயமும் பக்தியும்.

தெளிவு, துணிவு, தீர்மானம், ஒவ்வொன்றையும் தனியாக எடுத்துக் கொள்ளுவோம். அவைகளில் எத்தகைய பயமும் பக்தியும் கலந்து கொண்டிருக்கின்றன என்பதைக் கவனிப்போம். தெளிவிலே தவறு கலக்கலாகாது என்ற பயம் இருக்கவேண்டும். நேர்மையும் ஒழுங்கும் கலக்கவேண்டும் என்ற பக்தி இருத்தல் வேண்டும். ஒரு இடத்தில் அசுத்தமில்லாமை மட்டும் போதாது. சுத்தமான பொருளும் அந்த இடத்தில் அமையப் பெற்றிருக்கவேண்டும். செய்தற்கரிய காரியத்தை செய்து முடிக்கவேண்டும் என்ற பக்தி துணிவிலே கலந்து கொள்ளவேண்டும். பயம் நம்மைக் கிட்ட அணுகலாகாது என்ற பயமும் பிரார்த்தனையும் துணிவில் கலந்து நிற்க வேண்டும். என்றைக்கும் தளர்ச்சியில் அகப்பட்டுழலலாகாது என்ற பயம் தீர்மானத்தில் இசைந்துகொண்டிருக்கவேண்டும். உயிர் போனாலும் துவங்கிய நற்காரியத்தை செய்து முடித்துத் தீர வேண்டும் என்ற பக்தியும் அன்பும் தீர்மானத்தின் இணை பிரியாத் தோழர்களாக விளங்க வேண்டும்.

* * *

மேற்கூறிய சந்தர்ப்பங்களில், பயமும் பக்தியும் வெவ்வேறு உருவமும், தன்மையும், பொருளும் அடையப்பெறுகின்றன. தெளிவின் பக்தியை ஞானம் என்று பெயரிட்டு அழைக்கலாம். துணிவின் பக்திக்கு தன்னம்பிக்கை எனப் பெயர் கொடுக்கலாம். தீர்மானத்தின் பக்திக்கு கடவுளிடம் பக்தி, ஜீவகோடிகளிடம் அன்பு எனப் பெயர் கொடுக்கலாம். அறிவிலே பயம் ஏற்பட்டால், விலங்கு வாழ்வு வாழலாம்; துணிவிலே பயம் ஏற்பட்டால் அற்ப வாழ்வு வாழ நேரிடும்; தீர்மானத்தில் பயம் ஏற்படின், அசுரவாழ்வுதான் அதன் பயனாக முடியும்.

* * *

ஒருவனுக்கு பய பக்தி இல்லையெனின் அவனிடம் சங்கற்பம் இல்லை என்பது வெளிப்படை. சங்கற்பமின்றி இயங்கும் வாழ்வுக்கு ஒரு உதாரணம், இலக்கு வேண்டின், நமது தற்போதைய வாழ்வைத் தாராளமாக எடுத்துரைக்கலாம். பயமற்ற, பக்தி நிறைந்த வாழ்வே, சங்கற்பத்தை ஏற்ற, தழுவிய வாழ்வாகும். சங்கற்பம் அதாவது தெளிவு, துணிவு, தீர்மானம்—இவைகள் யாவும் நமது வாழ்வில் இப்பொழுது காணப்படவில்லை. சங்கற்பம் என்ற [illegible] சக்தியை மீட்டும் நமது வாழ்வில் வாலித்துக் கொள்ளவேண்டும். வருவித்துக் [illegible] "எடுத்தகாரியம் யாவினும் வெற்றி" என்று சொல்லவும் வேண்டுமோ? நம்மை [illegible] நிற்பது தெய்வதமேனும், சாரும் மானுடமாயினும்" அதை மாய்த்து, வெற்றியை நமக்கு அளிக்கும் வல்லமை கொண்டது சங்கற்பம்.

# அறிவுள்ள சிறுமிகள்.

கவுண்ட் லி. ஓ. டால்ஸ்டாய் எழுதிய கதை.

திரு. அ. வே. தியாகராஜாவால் மொழி பெயர்க்கப்பட்டது.

ஆவணி சென்றது. புரட்டாதி வந்தது. மழையும் ஆரம்பமாயிற்று. தெருக்களிலெல்லாம் எப்பொழுதும் மழைநீர் ஓடிக்கொண்டே இருந்தது. சிற்சில இடங்களில் அந்நீர் தங்கியும் இருந்தது.

அக்கிராமத்தில் இரண்டு வீடுகள். அவ்விரண்டிற்கும் இடையே ஒரு சந்து. அவ்வீடுகளில் விழும் மழைத் தண்ணீர் எல்லாம் அச்சந்தின் வழியே தான் வெளியேறவேண்டும். ஒரு நாள் மழைபெய்து ஓய்ந்த பின்னர், அவ்விரண்டு வீட்டுக் குழந்தைகளும் வெளியில் தெருவில் அச்சந்திற்கு அருகாமையில் சந்திக்க நேர்ந்தது. அவ்விடத்தை அடுத்த சந்தில் ஆபரமான தண்ணீர்த் தேக்கம் ஒன்றிருந்தது. சந்தித்த குழந்தைகளில் ஒன்று மிகச் சின்னம். மற்றொன்று கொஞ்சம் பெரிது. அவர்களின் தாய்மார்கள் அவர்கட்கு அப்பொழுதுதான் புதிய ஆடைகள் புனைந்துவிட்டனர். சின்னதின் உடை ஊதாவாகவிருந்தது. பெரிதின் உடை அச்சடிக் கரையுடன் கூடிய மஞ்சள் நிறம் வாய்ந்தது. இரண்டிற்கும் தலையில் சிவப்புத் துண்டுகள் கட்டப்பட்டிருந்தன. அவைகள் அப்பொழுதுதான் கோயில்களில் இருந்துவந்தன. வந்து சந்தித்ததும் இரண்டும் தன் தன் உடையின் அழகைக் காட்டிவிட்டுப் பின்னர் விளையாட ஆரம்பித்தன. சிறிது நேரத்திற்கெல்லாம் தண்ணீரை வாரி இறைத்து வீசுவதில் அவைகளின் எண்ணம்சென்றது. சின்னக்குழந்தை தன்னுடைய காலில் போட்டிருந்த சப்பாத்துடன் தண்ணீரில் இறங்க எத்தனித்தது. அத்தருணத்தில் பெரிய பெண் அதனைத் தடுத்து "மால்ஷா! அப்படியே போகாதே. உன் தாயார் கோபிப்பாள். என்னுடைய செருப்பை நான் கழட்டிவிடுகிறேன். நீயும் அப்படியே செய்" என்றாள்.

இருவரும் அவ்விதமே செய்தனர். பின்னர் அச்சிறுமிகள் தங்கள் பாவாடைகளைக் கையில் தூக்கிக்கொண்டு தண்ணீரில் இறங்கி ஒருவரை ஒருவர் எதிர்த்து எதிர்த்து நடந்தனர். தண்ணீர் மால்ஷாவின் கணுக்கால்வரை வந்தது. உடனே அவள் "கௌல்யா! ஆழமாகவிருக்கிறது. எனக்குப் பயந் தோன்றுகிறது" என்றாள்.

அதற்கு மற்ற சிறுமி "பயப்படாமல் வா. இதற்குமேல் ஆழம் இராது" என்றாள்.

ஒருவரை ஒருவர் நெருங்கி அணுகியதும் கௌல்யா, "ஜாக்கிரதை. தண்ணீரை இறைக்காதே. இதுவாக நட" என்று சொன்னாள்.

இதை அவள் சொல்லி முடிப்பதற்குள் மால்ஷா காலை ஓங்கித் தண்ணீரில் அடித்தாள். தண்ணீரெல்லாம் கௌல்யாவின் சட்டையில் வாரி இறைக்கப்பட்டு விட்டது. சட்டையும் கெட்டு விட்டது. அவ்ளின் மூஞ்சி முகமெல்லாம் அவ்வாறே ஆயிற்று. சட்டை கெட்டு விட்டதைக் கண்ட சிறுமி மால்ஷாவை அடிப்பதற்காக அவளைத் தூரத்திக்கொண்டு ஓடினாள். மால்ஷா, துன்பத்தில் அகப்பட்டுக் கொண்டோம் என நினைந்து பயங்கொண்டு தண்ணீரை விட்டு ஓடிவந்து தப்பித்து விட்டிற்குள் செல்ல எத்தனித்தாள். அத் தருணத்தில் கௌல்யாவின் தாயார் அவ்வழி செல்ல நேர்ந்தது. அவள் மகளின் சட்டையிலெல்லாம் அழுக்குத் தண்ணீர் வாரி இறைக்கப்பட்டிருப்பதைப் பார்த்து, அவள் "போக்கிரிக் காலிக் கழுதை! நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்" என வினவினாள்.

அதற்கு அச்சிறுமி "மால்ஷா வேண்டுமென்றே செய்தாள்" எனப் பதிலிறுத்தாள்.

இதைக் கேட்டதும் கௌல்யாவின் தாயார் மால்ஷாவைப் பிடித்து முதுகில் ஒரு அடி போட்டாள். தெருவிலுள்ளோருக்கெல்லாம் கேட்கும்படி மால்ஷா பலத்த சத்தம் போட்டு அலறினாள். இதைக் கேட்டு அவள் தாயார் வெளியில் வந்தாள்.

தன் பெண்ணை அடுத்த வீட்டுக்காரி அடிப்பதைப்பார்த்து "எதற்காக அவளை நீ அடிக்கிறாய்" எனக்கோபித்தாள். வார்த்தை மேல் வார்த்தை வந்து கடைசியில் ஒரு பெரும் சண்டை ஏற்பட்டுவிட்டது. வீட்டுக்குரிய ஆடவர்களும் வெளியில் வந்தனர். தெருவில் பெருங் கூட்டம் கூடிவிட்டது. எல்லோரும் கூக்குரலிடுகின்றனரே தவிர, விஷயத்தை கவனிப்பார் யாரையுங் காணோம். சண்டை வலுவடைந்து ஒருவரை குத்தித் தள்ளினர். அதற்குமேல் அடி பிடியும் உண்டாகும் போலிருந்தது. அத்தருணத்தில் கௌல்யாவின் பாட்டியார் வந்து நிலையைச் சாவதானப் படுத்த முயன்றாள். "நண்பர்களே! எதை நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? இப்படி நடந்து கொள்வது சரியா? ஒரு நல்ல நாளில் கூடவா இப்படி! ஆனந்தமாய் இருக்கவேண்டிய நேரம். இப்படித் தவறுதல் செய்தல் கூடாது" என்றாள் அப்பெருங் கிழவி.

அக்கிழவியின் வார்த்தைகளை அவர்கள் கேட்கவில்லை. அனேகமாக அவளைக் கீழே பிடித்துத் தள்ளிவிட்டார்கள். கௌல்யாவும் மால்ஷாவும் இல்லாவிடில் அக்கூட்டத்தை அங்கிருந்தவர்களால் கலைத்திருக்க முடியாது. பெண்கள் ஒருவரை ஒருவர் திட்டிக்கொண்டிருக்கையில், கௌல்யா தன் சட்டையிலிருந்த சகதியைத் துடைத்து விட்டு மறுபடியும் தேங்கியிருந்த தண்ணீரை அணுகினாள். கையில் ஒரு கல்லை எடுத்துக்கொண்டு அத்தேக்கத்திலுள்ள நீர் வீதிவழியே ஓடிவிடும்படி ஒரு சிறு வாய்க்கால் தோண்ட ஆரம்பித்தாள். உடனே மால்ஷாவும் அவளுடன் கூடி ஒரு மரக்கட்டையை எடுத்துக்கொண்டு வந்து தண்ணீரை வெளியேற்றும் வேலையில் அவள் தோழிக்கு உதவி செய்தாள். ஆடவர்கள் சண்டை இட ஆரம்பித்தபொழுது சிறுமிகளின் வாய்க்கால் வழியாகத் தண்ணீர் ஓடி கிழவி சண்டையை ஒழிக்க முயன்று கொண்டிருந்த இடத்தை நோக்கிச் சென்றது. ஓடும் தண்ணீருக்கு இரண்டு குழந்தைகளும் குதித்துத் தாவிக்கொண்டு சந்தோஷத்துடன் தண்ணீரைப் பின்பற்றிச் சென்றன"

"மால்ஷா! அதை பிடிப்பிடி" என்று கௌல்யா கத்தினாள். மால்ஷா பேசமுடியாத நிலையில் சிரித்தாள்.

அதிக சந்தோஷத்துடன், சிறு கட்டை தண்ணீரில் மிதந்து செல்வதைக் கவனித்துக்கொண்டு, சிறுமிகள் கூட்டத்தை நோக்கி ஓடினர். இது கண்ட கிழவி ஆடவர்களை நோக்கி "வெட்கமாக வில்லையா? இந்தக் குட்டிகளுக்காகச் சண்டையிடுவது. எல்லாவற்றையும் அவர்களே மறந்து விட்டு இப்பொழுது ஆனந்தமாய்ச் சேர்ந்து விளையாடுகின்றனரே. சிறுவர்கள்! உங்களைக்காட்டிலும் அறிவுடையவர்கள்! என்று கூறினாள்.

ஆடவர்கள் சிறுமிகளைக் கண்டு தாங்களே வெட்கப்பட்டு சிரித்துக்கொண்டு தங்கள் தங்கள் வீடுகட்குச் சென்றுவிட்டனர்.

"நீங்கள் சிறு குழந்தைகள் மாதிரி ஆனாலொழிய மோட்சத்தை அடைய முடியாது."

அன்பர்களே!

இச்சிறு கதையின் கருத்து கீழே காட்டிய சிறுவாக்கியத்தில் அடங்கி விட்டது. அவ்வாக்கியத்தை மறந்து விடாதீர்கள். உலகத்திலுள்ள மக்களிற் பெரும்பாலார் சிறிய சிறிய தவறுதல்களைப் பெரிதாகக்கொண்டு அதற்காக ஒருவருக்கொருவர் ஓயாது தீங்கிழைத்துக்கொண்டு திரிகின்றனர். அவர்கட்கு மோட்சவாயில் மூடப்பட்டிருக்கும் என்பதில் தடையுண்டோ? இல்லவே இல்லை. ஒருவர் உங்கட்குத் தீங்கிழைப்பினும் அதை மறந்து அவர்களுடன் கூடி இவ்வுலகில் இன்புற்று, நல்லுலகை அடைய முயலுவீர்கள்.

# பார்லிமெண்டு மகாசபை.

## அதைப்பற்றிய சில உண்மைகள்.

(மேஜர் கிராஹாம் போல் எழுதியது.)

(ஆங்கில நாட்டுப் பார்லிமெண்டு மகாசபை அமைப்பையும் அது செய்யும் வேலையையும் வியந்து பேசாத ஆங்கிலேயர்கள் இல்லை எனவே சொல்லலாம். தற்பெருமை பேசிக் கொள்ளுவது ஒருவகை இயற்கை. அந்த இயல்பைமீறி, பெரும்பான்மையான ஆங்கிலேயர்கள், பார்லிமெண்டு சபை செய்யும் உண்மையான வேலையைப் பற்றி பேசத்துணிவதில்லை. இந்திய விஷயங்களைப்பற்றி ஊக்கம் எடுத்துக்கொள்ளும் பிரிட்டிஷ் கமிட்டியின் கௌரவ காரியதரிசியான மேஜர் (சேனையில் பெரியபதவி) கிராஹாம்போல் அவர்கள் பார்லிமெண்டு மகா சபையைப் பற்றியும் ஆங்கிலேயர்களின் அரசியல் இயற்கையைப் பற்றியும் சில உண்மைகளைக் கூறியிருக்கிறார். இந்த கட்டுரை கல்கத்தாவில் மாதந்தோறும் வெளிவரும் "மாடர்ன் ரெவியூ" என்ற பத்திரிகையில் பிரசுரமாயிருக்கிறது. அதனை மொழிபெயர்த்து ஊழியனில் பிரசுரிக்கின்றோம். ப-ர்.)

இந்த நாட்டில் (ஆங்கில நாட்டில்) பார்லிமெண்டு மகா சபையைப்பற்றி கர்வத்துடன் பேசிக்கொள்வது ஸகஜம். இதையே இலக்காக வைத்துக் கொண்டு, உலகத்தார்தங்கள் அரசியல் அமைப்புகளையும் ஆக்கிக்கொள்ள வேண்டும் என்று நாம் எண்ணுவதும் இயற்கை. சென்ற ஆண்டு, பிரபுக்கள் சபையில், இந்திய மந்திரி பர்க்கென்ஹெட் பிரபு பேசுகையில், "ஆங்கிலேயர்களுக்கு அரசியல் அமைப்புகளை ஆக்கும் வகை சிறிது தெரியும். இரட்டையாட்சியை இந்தியாவுக்குத் தந்தருளிய ஆங்கில நாட்டுக்கு இந்தியா என்றும் கடமைப்பட்டுள்ளது" என்று இந்தியர்களுக்கு அறிவுறுத்தினர். (மேற்கூறிய இரட்டையாட்சி முறையை ஆங்கில நாட்டில் ஆங்கிலேயர்கள் சிறிது காலம் கூட அனுபவத்தில் பொறுத்திருக்கமாட்டார்கள்.) இந்திய மந்திரி எவ்வளவு கூறியபோதிலும், நம்முடைய பார்லிமெண்டு சபை அமைப்பில் எவ்வளவோ சீர்திருத்தம் செய்யவேண்டியிருக்கிறது. இது சங்கதி, பார்லிமெண்டு மகாசபையின் கமிட்டி அறைகளை ஒருநாள் சென்று பார்த்தாலும் தெளிவாகத் தெரியவரும். சுவர் முழுமையையும் மூடிக்கொண்டிருக்கும் பூமி நூல் படங்களை அந்த அறைகளிலே காணலாம். வேல்ஸ், ஸ்காட்லாந்து (ஆங்கில நாட்டின் பகுதிகள்) பிரதேசங்களில் சில கிராமங்களை எவ்வாறு டிராமவண்டிகளால் இணைப்பது அல்லது காற்று விளக்குகளால் கூட்டுவது என்ற யோசனைகளைப்பற்றிய படங்கள் மேற்கூறியவை. இவைகள் பார்லிமெண்டு சபையாருக்குக் காட்டிலும் அந்தந்த கிராமவாசிகளுக்கு நன்றாகத்தெரியும். நிபுணர்களைக்கொண்டு, பணச்செலவு செய்தாற்கூட, பார்லிமெண்டு சபையார் அறிந்து கொள்ள முடியாது. இந்த கமிட்டிகள்—இவைகளின் தொகை அனந்தம்—பார்லிமெண்டு சபையில் உண்மையான வேலையை மிகுதியும் தடைசெய்து வருகின்றன. பார்லிமெண்டு நேரான முறையில் நடைபெற இந்த கமிட்டிகள் இடந்தருவதில்லை.

பார்லிமெண்டு சபை சம்பந்தமாக இன்னொரு கெட்ட வழக்கம் இருக்கிறது. பலசமயங்களில் பார்லிமெண்டு சபை இரவில் கூடி, இரவு முழுதும் கலைவதில்லை. இது ஒரு புராதன வழக்கம். முன்காலங்களில் பார்லிமெண்டு சபையின் பெரும்பான்மையான அங்கத்தினர்கள் பாரிஸ்டர்கள். அரசியல் கிளர்ச்சிமூலமாய் எளிதிலே அதிகாரமும் பதவியும் பெறலாம் என்றுகண்டு, பாரிஸ்டர்கள் பார்லிமெண்டு அங்கத்தினர்களாக வேண்டும் என எண்ணம் கொண்டார்கள். ஆனால் அவர்கள் தங்கள் தொழிலை விட்டுவிடவும் கருதவில்லை. எனவே பிற்பகல் இரண்டே முக்கால் மணிக்குப்பின்னர் மூன்றே முக்கால் மணிவரைக்கும் கேள்விகள் போடுவது என்றும் பார்லிமெண்டில் வாதம் நான்கு மணிக்குத்துவங்குவது என்றும் வழக்கப்படுத்தப் பெற்றது. இது வக்கீல்களுக்கு உவந்த ஏற்பாடு. அவர்கள் காலை பத்துமணிமுதல் மாலை நான்குமணிவரையில் நீதிஸ்தலங்களில் இருந்துவிட்டு, பின்னர் பார்லிமெண்டுக்கு வரலாம்.

ஆனால் இப்பொழுதோ, வக்கீல் அங்கத்தினர்கள் மிகவும் குறைவு. வாக்காளர்கள் வக்கீல்களை இப்பொழுது மிகுதியும் அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுப்பதில்லை. ஆனால் பண்டை வழக்கம் என்ற கொடுமையினால், பார்லிமெண்டுகூடும் சங்கதியில் சீர்திருத்தம் இன்னும் ஏற்படவில்லை. நீதிஸ்தலங்களுக்கு விடுமுறைக் காலம் அதிகம். அதைக்காட்டிலும் அதிகமாக பார்லிமெண்டுக்கு விடுமுறை இருக்கிறது. எனவே, செய்யவேண்டிய வேலையில் ஒரு பகுதிதான் நடைபெறுகின்றது. சிலசமயங்களில்—சமீபத்தில் நேர்ந்ததுபோல—இரண்டு நா

(௩-ம் பக்கம் பார்க்க)



## கற்பனை உலகம்.

(ஒரு வருணனை)

மாலை ஐந்து மணி இருக்கும். வெயிலின் கொடுமை இன்னும் தணியவில்லை. ஒரு சிறிய நீரோடைக்கருகே இருந்த குடிசையில் மனிதர்களின் உள்ளத்தைக் கவரத்தக்க பாட்டு பாடப்பெற்றது. அந்த ஒலியைத்தவிர அச்சிறு குடிசையில், வேறு எந்த ஒலியும் எழவில்லை. குடிசையில் உள்ளே முழங்கி, விம்மி எழும் பாட்டுக்குத் தாளம் இசைப்பதைப்போல, நீரோடையில் அலைகள் கரையில் மோதிக்கொண்டிருந்தன. குடிசையில் அந்த சமயத்தில் இருந்தவர்கள் நால்வர். முதிய பருவம் எய்தியவர் அந்தக் குடிசைக்கு உடையவர். பாட்டுப் பாடுவது அவருடைய பெண். பக்கத்திலிருந்து, அந்தப் பாட்டைக் கருத்துடன் கேட்பவர்கள் இருவர். அவர்களிருவருக்கும் பத்து முதல் பதினைந்து வயதுக்குள்ளிருக்கும். ஒருவர் ஆண். அவனுக்கு பதினொன்று பிராயமிருக்கலாம். அவனுக்கு முருகன் என்று பெயர். மற்றவர் பெண். அவளுக்கு எட்டு வயதிருக்கலாம். அவளுக்குப் பெயர் உமை. இவர்களிருவரும், பாடும் பெண்மணியின் குழந்தைகள். பாடும் பெண்மணிக்கு பார்

ளில் (௪௮ மணி) ௩௪ மணி நேரம் வரையில் பார்லிமெண்டு சபை கூடி, வேலை செய்யவேண்டியிருக்கிறது. சாப்பாட்டுக்கு இடை வேளை ஓய்வு கிடையாது. இஷ்டப்பட்டபொழுதெல்லாம் அங்கத்தினர்கள் வெளியேறிவிடுகிறார்கள். வாதம் நிகழும் சமயங்களில் பல அங்கத்தினர்கள் பார்லிமெண்டு சபையில் இருப்பதில்லை. வோட்டுப் போடும் சமயத்தில் மட்டும் எங்கிருந்தோ அவர்கள் சபையில் தோன்றி ஆஜராகி விடுகிறார்கள். தங்கள் தலைவர்கள் கூறியவாறு வோட்டுப் போட்டு விடுகிறார்கள். எதைப்பற்றி, எந்த அபிப்பிராயத்தை முன்னிட்டு, வோட்டுப் போட்டார்களென்று அவர்களுக்குத் தெரியாது. இந்த வழக்கத்தை அடியோடு மாற்றி யெறிய வேண்டும். இவ்வாறு வேலை செய்யும் எந்த அமைப்பும் சீக்கிரம் மஞ்சள் காகிதம் கொடுத்தாகவேண்டும். (மஞ்சள் காகிதம் கொடுப்பது தரித்திர நிலையை முன்னிட்டு, கடன் கட்ட நிர்வாக மில்லாமையைக் குறிப்பதாகும்). பார்லிமெண்டு சபைக்கும் இந்த நிலைமை நேருவது உறுதி.

மாலை மூன்று மணிக்கு உட்கார ஆரம்பித்து, மறு நாட் காலை சுமார் ஒன்பது மணிவரையிலும் கண் விழிப்பவர்கள் எந்த விஷயத்திலும் அறிவு தெளிவுடன் கலந்து கொள்ள முடியாது. இத்தகைய இரவுக் கூட்டங்கள் நாளுக்கு நாள், வாரா வாரம் நேரும்.

பார்லிமெண்டு சபை காலை ௧௦ மணிக்கு கூடவேண்டும். இடைவேளை போஜனத்துக்காக ஒரு மணி ஓய்வு எடுத்துக்கொள்ளவேண்டும். மாலை 5, 6 மணிக்கு கலையவேண்டும். சீர்திருத்தம் வேண்டினால், இவ்வாறு நாம் இப்பொழுதே செய்ய முற்படவேண்டும். ஆனால் வழக்கம் என்ற சாக்கில் நமக்கு மோகம் அதிகம். நம்முடைய மூதாதைகள் அவ்வாறு செய்தார்கள் என்று சமாதானம் கூறுகின்றோம். நமக்கு கற்பனா சக்தி குறைவு. பிற்போக்குத் தழுவிய மனத்தார்களாதலின், எந்த மாறுதலைக் கண்டும் நாம் (ஆங்கிலேயர்கள்) அஞ்சுகின்றோம். இந்த விஷயத்தில் மாறுதல் நிச்சயமாக ஏற்படவேண்டும். இல்லாவிடில் அமைப்பில் தூசிபடிந்து அது உடைந்து போகும்.

# ஜீவகாருண்யம்.

திருச்செந்தூர் மு. கிருஷ்ணசர்மா பாடியது.

ஓவாத செல்வத் தமரிக்கைநா டுற்ற மக்கள்
நாவா லுரைப்பின் உடல்ஏங்கி நடுங்க எஃகம்
மேவா உயிர்கொல் களத்தின்விழுந் தோடு சோரி
நாவாய் செலவும் வரவுங்கயம் நண்ணு மென்பார். (க௩அ)

வாளா லறுப்பின் உதிரம்வறி தாகி வீழும்
மீளாதெனு நனிவெ தும்புவெர் நீரி விட்டுக்
கேளாதஇக் கொடுமை செய்து விலங்கு கீண்டுண்
டாளாகுவார் நரகி னுக்கவ ருட்சி லொரே. (க௩௯)

கண்டோர்களாம் அவர்ப லப்பல கல்வி யுண்மை
கொண்டோர்களாம் அமைதி எங்கணும் கூடு மாறு
விண்டோர்களாம் அளவி லாஉயிர் வீட்டு வாராம்
உண்டோவியப் பிதனின் வேறுல கதது வீரே (க௪௦)

பூவிற் சிறந்த படைவன்மை பொருந்து மின்னோர்
மேவிப்புலால் உணவு நீக்கிட வேண்டு மென்று
பாவிப்பரேல் இமையி லாகும் பயங்கொ ளாது
தாவித் திரியும் உயிர்யாவுமித் தார ணிக்கே. (க௪க)

காரைச் சிவன்ற னடியார்அருள் கண்ட தூயோர்
போரிற் றிறனும் படைமாண்பும் பொருந்தி னூலும்
சூருற்றஇவ் வரசி யல்விதிச் சூழ்ச்சி கொண்டு
நேருற்றிடுங் கொலைம றுத்தலை நீக்க உன்னார். (க௪உ)

ஆனுற்படை வலியின் ஊனயில் வாரை சுட்டு
நானுஉயிர்க் கொலைம றுக்க நவின்றி டேன்மற்
றானுடிடீர் அரசி யல்விதி என்று ரைப்பின்
ஆனு உயிரை அயில்வேனென் றிரங்கி வீழ்வார். (க௪௩)

மங்காத காரை அடியீர்படை வன்மை தன்னால்
இங்காருயிர்க் கொலைம றுக்க இயம்பி னேனென்
றுங்காசி லுள்ளம் மறுகிர்மனத் துள்ள டங்கித்
தங்காச் சினத்தின் மிகையாலது சாற்ற லுற்றேன். (க௪௪)

வதி என்று பெயர். அவள் அவ்வீட்டுப் பெரியாருடைய புதல்வி. அவளுடைய கணவன் அலுவலின் பேரில் வெளியே சென்றிருக்கிறார். வீட்டுக் கிழவருக்கு ஆதிபுராணர் என்று பெயர்.

பாட்டு முடிந்தது. "பேஷ்" என்றார் ஆதிபுராணர். "தாத்தா, பாட்டு நன்றாயிருக்கிறதா" என்று உமை கேட்டாள். "பாட்டை ஆக்கியவர் பாரதியார்; பாட்டைப் பாடுபவள் பார்வதி. பாட்டு எவ்வாறு கெட்டுப்போகும்? இனம் இனத்தோடு சேர்ந்தால், பொங்கலோ பொங்கல்" என்றார் தாத்தா. தாத்தாவின் பெயருக்கு ஏற்றாற்போல, எப்பொழுதும் அவர் கதையாகத்தான் பேசுவார் என்றான் முருகன். எல்லோரும் நகைத்தார்கள்.

பாரதியாரின் "முருகன் பாட்டும்' ஜயபேரிகையும்" பாடு, அம்மா பார்வதி என்றார் பெரியவர். பார்வதியும் இசைந்தாள். பாட்டுகளும் பாடியாகி விட்டன. ஆனால் குழந்தைகள் பாட்டனருக்குத் தொந்திரை கொடுக்கத் தலைப்பட்டனர். ஆயிரம் கேள்விகளை மழைபோல விடாமல் கேட்கத் துவக்கினார்கள். அவர்கள் வாய் ஓயவில்லை. கேட்ட கேள்விகள் பலவாயினும், ஒரே ஒரு கேள்வியை மட்டும் கருத்துடன் கேட்டார் பாட்டனார். அந்தக் கேள்வியைக் கேட்டவள் உமை. "என் தாத்தா! ஏய்க்கிறீர்கள்? பாரதியார், பாரதியார் என்று எப்பொழுதும் சொல்லுகிறீர்கள். அவர் யார் என்று எங்களுக்குச் சொல்லுவதில்லை. சொன்னால் எங்களுக்குத் தெரியாதா" என்று கேட்டாள். "வேண்டுமென்றே, நான் இதுவரையிலும் உங்களுக்கு பாரதியாரைப்பற்றிச் சொல்லவில்லை. உங்களுடைய தாயாரின் மனதைப் பண்படுத்திய பிறகுதான், உங்களுக்குச் சொல்லுவதாயிருந்தேன்" என்றார் ஆதிபுராணர்.

"பாரதியார் யார்" என்றாள் உமை.

"அவரைப்பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள்" என்றான் முருகன்.

உமை.—அவர் பெயரென்ன?

முருகன்:—அவர் என்ன செய்து கொண்டிருந்தார்?

பார்வதி.—தாத்தாவை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? அவர் சொல்ல மாட்டாரா? அவர் சொல்லுவதை நீங்கள் கவனமாய்க் கேட்க வேண்டும். பாரதியார் ஒரு மகான்.

இவ்வாறு பார்வதியம்மாள் முடிக்க எத்தனிக்கையில், ஆதிபுராணரின் கண்களில் நீர்த்துளிகள்கூடிக்கொண்டு கண்களின் உள்ளே செல்ல முடியாமலும் வெளியே வர முனைந்து கொண்டும் தவித்துக்கொண்டிருந்தன.

உமை:—தாத்தா அழுகிறார்.

முருகன்:—ஏன் தாத்தா?

உமை:—பாரதியார், தாத்தா, உங்களுக்குப் பிள்ளையோ? அவர் செத்துப் போய்விட்டாரோ?

பார்வதி;—குழந்தைகளா! கண்டபடி பேசாதேயுங்கள். பாரதியாரை கருத்தில் கொண்ட பொழுதெல்லாம், உங்கள் தாத்தா இவ்வாறு தான் கண் கலங்குவார். பாரதியார் பேரில் தாத்தாவுக்கு அவ்வளவு அன்பு. பாரதியார் நம்ம குடும்பத்தில் பிறந்தவரல்ல. பாரதியார் ஒரு பெரிய கவி.

உமை:—கவி என்றால் என்ன?

முருகன்:—பாட்டுப் பாட்டுகிறவரா? "முருகா, முருகா, முருகா, வருவாய் மயில் மீதினிலே" என்று, அம்மா, நீங்கள் பாடிய பொழுது, கதவைத்திறந்து கொண்டு யாரோ ஒருவர்

கற்பனை உலகம்.

வருகிறாப்போல் எனக்குத் தோன்றிற்று. பாட்டு மிகவும் உருக்கமாகவிருந்தது. அது பாரதியார் பாட்டுத் தானே?

பார்வதி:—ஆமாம். பாரதியாரைப் பற்றி, தாத்தா, எல்லாம் சொல்லுவார். அவருக்கு யாதொரு தொந்திரவும் கொடுக்காமல் நீங்கள் கவனமாய்க் கேட்கவேண்டும்.

இருவரும் சரி என்றார்கள்.

ஆதி புராணரின் முகம் சிறிதுநேரம் வரையில் வாட்டமுற்றுக் கிடந்தது. பெருமூச்செறிந்தார். கடைசியாகப் பேசத்துவக்கினார்.

"குழந்தைகளே! பாரதியாரைப் பற்றி சொல்லுகிறேன், கேளுங்கள்.

தாத்தா! சொல்லுங்கள். பாரதியார் ரொம்ப பெரியவரா? அவர்இருக்கிறாரா, இறந்துவிட்டாரா? என்று உமைகேட்டாள், மிக்கபரபரப்புடன்.

"இந்தக்காலத்தில் வெகு பேர்கள் பாரதியார் என்ற பட்டம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவ்வாறு செய்தால், நமது அருமை பாரதியாரை கௌரவபடுத்தலாம் என்று அவர்கள் எண்ணுகிறார்கள் போலிருக்கிறது" என்றார் ஆதிபுராணர்.

பாரதியார் என்பது பட்டமா? அது பெயரல்லவா? அப்படியானால் பாரதியார் எந்தஜாதி" என்று முருகன் கேட்டான்.

"முருகா! உனக்கு நான் எத்தனை தடவைகள் சொன்னபோதிலும், நீ ஜாதியைப்பற்றிப் பேசாமலிருப்பதில்லை. அது நாங்கள் செய்த கொடுமை. அதற்காக நீ என்ன செய்வாய்? பாரதியாருக்கு ஜாதி கிடையாது. அவர் தமிழன்; அவர் தேசபக்தன். அவர் உண்மைக்கு தொண்டன்; சக்திக்கு தாஸன். ஏழைகளுக்கு இரங்குபவர்; திக்கற்றவர்களுக்குத் தோழன் ஒப்பற்ற கவி. ஞானரதத்தில் ஏறிப் பறந்தவர்; பாஞ்சாலியின் சபதத்தைப் பரிவுடன் பாடியவர். கண்ணனைக் காதலித்து அவரிடம்ஈடுபட்டவர். நாட்டின் சாரமற்ற நிலையைப்பற்றி சிந்தித்து, சிந்தித்து, துயரில் ஆழ்ந்து, உள்ளம் குமுறி, சுதேச கீதங்கள் பாடியவர். தமிழ்பாஷை உயர்வடைந்து, உயிர் பெற்று முன்னேறவும், தமிழர்கள் உறுதி கொண்டு, பெருமை படைத்து உலகத்தார்களால் நன்கு மதிக்கப்படவும்—இந்த நோக்கங்களை பூர்த்தி செய்யும் பொருட்டே, பாரதியார் பிறந்தார், வாழ்ந்தார், இறந்தார்.

இன்பத்தைக் கனவிலும் கவிதையிலும் பாரதியார் கண்டாரேயல்லாமல், வாழ்வில் அனுபவித்ததேயில்லை.

அவர் மகான். அவர் வீரன். அவர் எல்லோருக்கும் தோழன். எதற்கும் அஞ்சாத தீரன். அவர் பேச்சு விருந்து. அவர்சிரிப்பு ஆனந்தவாரிதி.

அவருடைய முழுப்பெயர் சி. சுப்பிரமணியபாரதியார்" என்று முடித்தார் ஆதிபுராணர்.

உமை:—தாத்தா! அவரைப்பற்றி தெரிந்ததெல்லாம் சொல்லுங்கள்.

ஆதிபுராணர், பின்னர் சொல்லுவதாக சமாதானம்கூறி, பேச்சை நிறுத்தி, சிந்தையில் ஆழ்ந்தார்.

# முன்னும் பின்னும்.

சீதாபதி எழுதியது.

“முன்னும் பின்னும்” என்ற மகுடமிட்டு, “ஊழியன்” ஆசிரியர் அவர்களின் அனுமதியின்பேரில், வாராவாரம் “ஊழியன்” பத்திரிகையில் எழுதிவருவதாகத் தீர்மானித்திருக்கிறேன். “முன்னும் பின்னும்”, எதையும் தனிப்பட்டுக் குறிப்பதல்ல. பெயர்பெற்ற ஆங்கில நூலாசிரியர் கூறியதுபோல, “முன்னும் பின்னும்” என்ற மகுடத்தின் அதிகார எல்லை கட்டுக்கும், கணக்குக்கும், பணத்துக்கும், பிறர் பாணத்துக்கும் அடங்கியதல்ல. “முன்னும் பின்னும்” ஆட்களை வெறுப்பதும் ஆணவத்தை எழுப்புவதும் தனது வேலையாகக்கொள்ளவில்லை. கூடுமானவரையில் நேர்மைக் கண்களுடன், உலக நிகழ்ச்சிகளை, “முன்னும் பின்னும்” நோக்கிவரும். உண்மையை வளர்த்து சமூக ஆபாசங்களைக் களைவது இந்த மகுடத்தின் சிறப்பான வேலையாகும்.

* * *

முன் நாட்களிலே மனிதர்கள்—சிறப்பாக இந்தியர்கள்—உண்மையாளர்களாக இருந்தார்கள் எனக் கூறப்படுகிறது. அது ஏன் இப்பொழுது மாற்றமடையவேண்டும்? உண்மையே பொய் உருவெடுத்துவிட்டதா? அல்லது உண்மையே உலகத்தைவிட்டு அகன்றுவிட்டதா? அல்லது உண்மையே உலகத்தில் இருந்ததில்லையா? உண்மை பேசுவதினால் நன்மை இல்லை என்று உலக் மக்கள் தங்கள் அனுபவத்தால் கண்டுகொண்டார்களா? நன்மை பயப்பதாயின், அதை ஏன் விட்டுவிடவேண்டும்? காரணம் கூற முடியுமா?

* * *

முன் காலங்களில் இந்தியர்கள் நூறு வயதுக்கதிகமாக வாழ்ந்துவந்தார்களாம். இப்பொழுதோ, நூறு வயது, புஸ்தகங்களிலும் பிரசங்கங்களிலும் மட்டும் காணப்படுகிறது. அனுபவத்தில் இல்லை. காலம் அநித்தியமாதலின், வயதைப்பற்றிக் கவனிக்கவேண்டாம் என்று இந்தியர்கள் தீர்மானம் கொண்டார்களா? அல்லது வேலைத் தொந்திரவினால், வயதைக் கவனிக்க முடியவில்லையோ? வயதைப்பற்றி எவ்வளவு வாதாடினாலும், இயமன் விட்டுவிடமாட்டான் என்ற எண்ணத்தை நாடியோ?

* * *

இன்பம் பொய், துன்பம் பொய், வாழ்வு பொய், உலகம் பொய், காணுவதெல்லாம் தோற்றம் என்று வாசாம கோசரமாய் தத்துவம் பேசப்படுகிறது. நீட்டி முழக்கிக்கொண்டு, எல்லாம் பொய் என்று தத்துவம் பேசும் மாந்தர்களின் பேச்சு எத்தன்மைத்து? அதுவும் பொய்யல்லவோ? அதை ஏன் ஜனங்கள் மதிக்கவேண்டும்? எங்கும், எப்பொழுதும், யாரிடத்திலும் பொய் ஒன்றையே காணும் இயல்பு இந்தியர்கள் படைத்ததினால், உண்மை ஒளிந்துகொண்டதுபோலும்! பொய் மலிந்துபோனால், உண்மையை நாடுபவர்கள் யாவர்? உலகம்பொய்மயம் என்று தத்துவமே கூறும்பொழுது, உலகத்தார் உண்மையைகாட இச்சை கொள்ளுவார்களா?

* * *

தங்கள் தொழில் என்னவென்று ஒருவரைக்கேட்டால், அவர் சிறிதும் தாமதமின்றி “சுகவாசி” என்று பதில் அளிக்கிறார். சுகவாசி என்றால் பொருள் என்ன என்பது அவருக்கு விளங்கவில்லை போலிருக்கிறது. தன்னைச் சுகவாசி என்று அழைத்துக்கொள்ளும் மனிதனுக்கும் அவருடைய தேக உறுப்புகளுக்கும் யாதொரு சம்பந்தமில்லை என்பது பொருள். மூளை முதல் அவருடைய உள்ளங்கால் வரையிலும், அவருக்கு எதுவும் உபயோகப்படவில்லை என்பது பொருள். சுகவாசி என்றால் பிறன் கைக்குழந்தை எனக் கூறலாம். எது இழிவோ, அதை கௌரவமாகக்கொள்ளுவது தற்காலப் பெருமைபோலும்!

* * *

“நேற்றைய முன்தினம் தேவாங்க வகுப்பைச் சேர்ந்த ஓர் பெண்ணின் தந்தையும் மனைவியும்...........” என்று ஒரு பத்திரிகையில் எழுதப்பெற்றிருக்கிறது. பெண்ணுக்குத் தந்தை இருப்பது இயற்கைதான். பெண்ணுக்கு மனைவி உண்டென்பது, அந்தப் பத்திரிகை மூலமாய்த்தான் அறிவக்கிடக்கின்றது. நவநாகரிகத்தை முன்னிட்டு, இனிப் பெண்கள் பெண்களைத்தான் மணந்து கொள்ளுவார்கள் போலத் தோன்றுகிறது. ஆண்மக்கள் எச்சரிக்கையுடனிருப்பது நல்லது. அல்லது மேற்கூறிய பத்திரிகையின் ஆசிரியரை யோசனைக்காகக் கலந்து கொள்ளலாம்.

* * *

அதே பத்திரிகையில், “ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டும், அவன் உயிர் துறந்தான்” என்ற வாக்கியம் காணப்படுகிறது. இதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. தூக்கிச்சென்றால், மனிதனுடைய உயிர் போகாதா? அல்லது ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டால், உயிர்நீங்காதா? ஆஸ்பத்திரி என்ற சொல்லைக்கேட்ட மாத்திரத்தில், இயமன் பயப்படுவான், பயப்படவேண்டும் போலிருக்கிறது! பத்திரிகையின் ஆசிரியர் இயமனுக்கு இறுதிக் கடிதம் அனுப்பிவிட்டார். உயிர்க் குலத்துக்கு இனி பயமில்லை!

* * *

“காந்தி பம்பாய் கவர்னரைப்போய்ப் பார்த்தாராமே! அவ்வாறு அவர் செய்யலாமா” என்று திண்ணைகளில் வம்பு பேசுகிறவர்களை நீங்கள் கண்டிருப்பீர்கள். அவர்களை திண்ணை வம்புக்காரர்களென்று சொல்வது கூடத்தவறு. அவர்கள் பரோபகாரிகள். அவர்களுக்குத் தங்கள் வேலையென்று ஒன்றுமே கிடையாது. பிறர் செய்வதில், சொல்லுவதில் கருத்துச்செலுத்துவதில் இவர்களுக்கு பெருமிதமான அக்கரை! காந்தியின் வேலையை நிர்ணயிக்கும் இப் பெரியார்கள், சிறிது சுயநல புத்தியுடன் தங்கள் சொந்த வேலையை கவனித்துப்பார்க்கலாம். பிறரைப்பற்றிப் பேசுவது தங்கள் கடமை எனக்கொண்டிருக்கும் பெரியார்களுக்கு உபதேசம் செய்ய என்னாலாகுமா?

* * *

“உமக்கு நாக்கு ஒன்றோ, இரண்டோ? ஏன் முன்னுக்குப்பின் முரணாகப் பேசுகிறீர்? முன் சொன்ன வார்த்தைகளுக்கு நேர் விரோதமாகப் பேசுகிறீரே” என்றார் ஒருவர். “நல்ல வேளை! இந்தக் கேள்வியைக் கேட்டீர்களே! பலரைப்பற்றி இம்மாதிரியான சந்தேகத்தைப் பலர் கொள்ளுகிறார்கள். எனக்கு நாக்கு ஒன்றுதான். இரண்டாயிருப்பின், அவைகளுக்குள் சண்டையுண்டாகும். எந்த நாக்கினால் பேசுவது என்ற சந்தேகம் எனக்கு உண்டாகிவிடும். பட்சபாதம் காட்டாமலிருக்கவேண்டின், நான் எப்பொழுதும் மௌனமாகவே யிருக்கவேண்டும். நல்ல வேளை! எனக்கு ஒரே நாக்குத்தான். உமக்கு இரண்டு நாக்குகள் இருந்தால், நீங்கள் இந்த மாதிரிக் கேள்வி கேட்கமாட்டீர்கள்” என்று மற்றவர் பதில் சொன்னார்.

* * *

“எப்பொழுது நமக்கு சுயராஜ்யம் வரும்” என்று என்னை ஒரு நண்பர் கேட்டார். “மந்திரத்தைக்கொண்டு நோய் தீராது என்று எப்பொழுது தெரிந்துகொள்ளுகிறார்களோ, தானம் வாங்கிப் பொருள் சேர்க்க முடியாது என எப்பொழுது கண்டுகொள்கிறார்களோ, பிறன் உழைப்பினால் சுகமும் பெருமையும் ஒருக்காலும் வாராது என எப்பொழுது அறிந்துகொள்கிறார்களோ, ஜோஸியத்தைக்கொண்டு சுயராஜ்யம் பெற முடியாது எனத் தீர்மானங்கொள்ளுகிறார்களோ, வம்புப்பேச்சை ஒழித்து வீரத்தில் ஜனங்கள் நாட்டங்கொள்ளுகிறார்களோ, அப்பொழுது சுயராஜ்யம் வரும்” என்றேன். நண்பர் தலையை அசைத்தார். அவருக்கு நான் விடைகொடுத்தனுப்பிவிட்டேன்.

---

# தமிழ்ப் பல்கலைக் கழகம்.

சில விபரங்கள்.

தமிழ் நாட்டில் ஒரு தனிச் சர்வகலாசாலை ஏற்படுத்துவது பற்றி விசாரணை செய்து அறிவிக்குமாறு சென்னை அரசாங்கத்தார் ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறார்கள். ராமநாதபுரம் ராஜா கமிட்டிக்குத் தலைவராயிருப்பார்.

௧. திருநெல்வேலி ஜில்லா போர்டு தலைவர் திவான்பகதூர் எஸ். குமாரசாமி ரெட்டியார் பி-ஏ, பி-எல்.

௨. சென்னை சட்டசபை மெம்பர் ஏ, பீ. என். மார்த்தாண்டம் பிள்ளை பி-ஸ்ரீ பி-எல்.

௩. திருநெல்வேலி ஸி. எம். காலேஜ் தலைவர் ரெவரண்டு எச். பீ. எங்; எம்-ஏ, பி-லிட்.

௪. மதுரை ஸ்ரீ பி. டி. ராஜன், பி-ஏ, பி-எல். சட்டசபை மெம்பர்.

௫. மதுரை அமெரிக்கன் காலேஜ் பிரின்ஸிபால் ரெவரண்ட் வாலஸ் எம்-ஏ, பி-டி.

௬. மதுரை ஸ்ரீ டீ. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் பீ-ஏ, பி-எல்.

௭. ராமநாதபுரம் ராஜா, ராஜ ராஜேச்வர ஸேதுபதி யென்னும் முத்து ராமலிங்க ஸேதுபதி.

௮. கனம் திவான்பகதூர் ஸர். எஸ். ஆர். எம். அண்ணாமலை செட்டியார்.

௯. ஸர். எம். ஸி. டி. முத்தையா செட்டியார்.

௧௦. திவான்பகதூர் ஸர். டி. தேசிகாச்சாரியார் பி-ஏ, பி-எல். திருச்சினாப்பள்ளி.

௧௧. கான்பகதூர் பி. கலிப் உல்லா ஸாஹிப் பஹதூர் எம்-ஏ. பி-எல். சட்ட மெம்பர் திருச்சினாப்பள்ளி.

௧௨. திருச்சினாப்பள்ளி ஸெண்ட் ஜோஸெப்ஸ் காலேஜ் ப்ரொபஸர் ரெவரண்ட் பாதர் பீ. கார்ட்டி எஸ். ஜே.

௧௩. திருச்சினாப்பள்ளி பிஷப் ஹீபர் காலேஜ் தலைவர் ரெவரண்ட் ஆலன் எப். கார்டினர் எம். ஏ.

௧௪. மன்னார்குடி பிண்டலே காலேஜ் தலைவர் ரெவரண்ட் என். ஜி. பொன்னையா பி. ஏ. எல். டி.

௧௫. கூடலூர் ஸ்ரீ கே. வீதாராமரெட்டியார் பி-ஏ, பீ-எல் சட்டசபை மெம்பர்.

௧௬. வேலூர் எலிஸபெத் ஆர். வூர்ஹீஸ் காலேஜ் தலைவர் ரெவரண்ட் ஜே. ஜே. டி. போயர் எம்-ஏ, பி-டி.

௧௭. கோயம்பத்தூர் ராவ்பகதூர் ஸ்ரீ டி. ஏ. ராமலிங்கஞ் செட்டியார். பி-ஏ, பி-எல். எம். எல். ஸி.

௧௮. கோயம்பத்தூர் ஜில்லா போர்டு தலைவர் ராவ்ஸாஹிப் ஸ்ரீ வி. எஸ். ரத்ன சபாபதி முதலியார்.

௧௯ சென்னை டாக்டர் பி. சுப்பராயன் பார்—அட்—லா—எம், எல்-ஸி.

௨௦. சென்னை லயோலா காலேஜ் தலைவர் ரெவரண்டு பாதர் பீ. பட்ராம் எஸ்-ஏ, டி-டி.

௨௧. சென்னை ராவ்பகதூர் எம். ஸி. ராஜா.

௨௨. சென்னை ஸ்ரீ எஸ். அற்புதசாமி உடையார். பீ-ஏ, எல்-டி. எம். எல் ஸி.

௨௩. சென்னை கிறிஸ்டியன் காலேஜ் தலைவர் ரெவரண்ட் டாக்டர் மெஸ்டன் எம்-ஏ டி-டி.

௨௪. சென்னை பச்சையப்பன் காலேஜ் தலைவர் ஸ்ரீ கே. சின்னத்தம்பிபிள்ளை பி-ஏ, எல்-டி.

௨௫. மதுரை ஸ்ரீ எஸ். எஸ். சூரியநாராயண சர்மா பார்—அட்—லா.

௨௬. பெரிய குளம் ரு. ஜி. கே. பகவதி பீ-ஏ, பி-எல்.

௨௭. மதுரை ஜில்லா பட்டிவீரன் பட்டி; ஸ்ரீ பி ஏ. சுந்தரபாண்டியநாடார்.

௨௮. தஞ்சாவூர் ஸ்ரீ ஏ. டி. பன்னீர் செல்வம் பார்அட்- லா.

௨௯. தஞ்சாவூர் ஸ்ரீ ஐ. குமாரஸ்வாமி பிள்ளை பீ-ஏ.

௩௦. சென்னை ராவ்பகதூர் ஸி. நடேச முதலியார் எம். எல். ஸி.

௩௧. கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ் தலைவர் ராவ்பகதூர் ஸ்ரீ பீ. வி. சேஷ அய்யர் பீ. ஏ. எல். டி.

௩௨. சென்னை ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸாமி ஐய்யர் பீ-ஏ. பி-எல்.

௩௩. ராவ் சாஹிப் ஸ்ரீ எஸ். கிருஷ்ணஸாமி ஐய்யங்கார். எம். ஏ. பி. எச். டி எம். ஆர். ஏ. எஸ். எப். ஆர். எச். எஸ்.

௩௪. சென்னை ராவ்பகதூர் ஆர் கிருஷ்ணராவ் பான்ஸலே எம்- ஆர். ஏ. எஸ்.

௩௫. சென்னை ராவ்பகதூர் ஏ. லக்ஷ்மண ஸாமி முதலியார் பி-ஏ. எம். டி:

இவர்களில் ஸ்ரீமான் பி. டி. ராஜனும் ஸ்ரீமான் அற்புதசாமி உடையாரும் கமிட்டி காரியதரிசிகளாக இருப்பார்கள்.

தமிழ் சர்வகலாசாலை ஏற்படுத்துவதற்கேற்ற சாதகங்களைப் பற்றி பின்வரும் விஷயங்களைக் கமிட்டியார் பரிசீலனை செய்வார்கள்:—1. தமிழ் ஜில்லாக்களில் ஒரு தமிழ் ஸர்வகலாசாலையின் அவசியம்.

௨. அந்த சர்வ கலாசாலையின் தன்மை அதாவது போதனை முறைகளைக் கொண்டிலங்கவா? தமிழ் ஜில்லாக்களிலுள்ள தமிழ் நிலயங்களை யெல்லாம் ஒன்றாக்கும் முக்கிய இயக்கமாக இருக்கவா என்பது.

3. ஸர்வகலாசாலை இருப்பிடமும் அதன் ஆதீனத்தின் வரம்பும்.

௪. ஸர்வ கலாசாலைக்கு நிதி ஏற்படுத்தும் வழிகளும் அவற்றைக் கொள்ளும் வகைகளும்.

௫. பொதுவாக சர்வ கலாசாலை ஸ்தாபித்து நடக்கும் மார்க்கங்களை வகுப்பது.

தலைவரோடு கூட யோசித்து மேற்படி கமிட்டி எவ்வெப்போது கூடவேண்டுமென்று காரியதரிசிகள் அறிவிப்பர். பொதுவாகக் கமிட்டி கூடுதற்குரிய இடம், சென்னை ஸெண்ட் ஜார்ஜ் கோட்டைக்குள் சட்டசபை அரங்கின் வடபாரிசத்திலுள்ள கமிட்டி அறை.

கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தரல்லாத கமிட்டி மெம்பர்கள் கீழ்க்கண்டபடி படிச்செலவு பெறுவது:—

ரயில் மார்க்கமானால் ஒவ்வொருவருக்கும் முதல் வகுப்பு சார்ஜ் ஒன்று, மூன்றாவது வகுப்பு சார்ஜ் ஒன்று; ரோட்டுப் பாதையானால் மைலுக்குப் பன்னிரண்டு அணா. சென்னையில் தங்கவேண்டிய ஒவ்வொரு நாளுக்கும் ரூபாய் ஏழரை படிச்செலவு.

கமிட்டி மெம்பர்கள் தாக்கல் செய்யும் படிச்செலவு தாக்கீதுகளைச் சோதித்து அனுமதிக்கும் அதிகாரம் சென்னை கல்வி இலாகா தலைவரின் (டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன்) பொறுப்பு. அவ்வாறு படிச்செலவுகள் வழங்குமுன் கல்வி இலாகாத் தலைவர் அவற்றிற்கேற்ற தொகையைக் கைப்பற்றிக்கொள்ளவேண்டும்.

---



# காந்தியடிகளின் சரிதம்.

## தென்னாப்பிரிக்கா பிரயாணம்.

மகாத்மா அவர்கள் “நவஜீவன்” பத்திரிகையில் எழுதியது.

இரண்டாவது பாகம்.

ஐந்தாவது அத்தியாயம்.

அந்த அதிகாரியிடம் (துரையிடம்) நான் போனது தவறுதான். ஆனால் நான் செய்த தவறுக்கு அதிகமாகவே ஆத்திரத்தையும் அகம்பாவத்தையும் அவர் காண்பித்தார். என்னுடைய தவறு என்னை வெளியே பிடித்துத் தள்ள வேண்டிய தவறல்ல. அவருடைய நேரத்தில் ஐந்து நிமிஷத்திற்கு அதிகமாக நான் எடுத்துக்கொண்டிருக்க முடியாது. ஆனால் நான் பேசுவதை அவரால் சிறிதுகூட பொறுக்க முடியவில்லை. என்னை வெளியே போம்படியாக என்னிடம் மரியாதையாக அவர் சொல்லியிருக்கலாம். ஆனால் அதிகாரத்தினால் அவருடைய தலை மயக்கங்கொண்டு விட்டது. பொறுமை அந்த அதிகாரியின் குணங்களில் ஒன்று அல்ல என்று பின்னர் எனக்குத் தெரிந்தது. அவரை வந்து பார்ப்பவர்களை அவமரியாதையுடன் நடத்துவது அவருடைய வழக்கமாம். சிறிய வெறுப்புக்கூட துரைக்கு பெரிய கோபம் உண்டாக்கிவிடும்.

என்னுடைய வேலையின் பெரும் பகுதி அவருடைய கச்சேரியில் தானிருந்தது. அவருடைய மனதை திருப்திசெய்து அவருடன் ஒத்துப் போக என்னால் ஆகவில்லை. அவருடைய தயவை சம்பாதிக்கவும் நான் விருப்பங்கொள்ளவில்லை. அவருக்கு விரோதமாக நடவடிக்கை நடத்துவேன் என்று பயமுறுத்திய பிறகு ஒன்றுஞ் செய்யாமல் நான் மௌனமாகவிருக்க விரும்பவில்லை.

இதனிடையே கத்தியவாட் பிராந்தியத்தின் சில்லரை அரசியல் சங்கதிகளை தெரிந்துகொள்ள துவக்கினேன். கத்தியவாட்டில் பல சிறு சமஸ்தானங்கள் இருக்கின்றன. எனவே அந்தப் பிராந்தியத்தில் “அரசியல் பதவி” ஆசை படைத்தவர்கள் பலருண்டு. சமஸ்தானங்களுக்குள் கேவலமான சதியும், அதிகாரிகளுக்குள் அதிகாரப் பதவிகளுக்காக சூழ்ச்சியும் அந்நாட்களில் (கத்தியவாட்டில்) மலிந்து கிடந்தன. அரசிளங் குமாரர்கள் பிறர் தயவை பார்த்தவண்ணமாயிருந்தார்கள்; பொய்த் தோத்திரம் செய்பவர்களுக்கு காது கொடுப்பது அவர்களுடைய வழக்கம். அவர்கள் துரையினுடைய வேலைக்காரனையும் திருப்தி செய்யவேண்டும். துரையினுடைய சிரஸ்தாரோ துரையைக் காட்டிலும் பெரியவர். ஏனெனின் சிரஸ்தார்தான் துரையின் கண்கள், துரையின் காதுகள், துரைக்கு மொழி பெயர்ப்பவர். சிரஸ்தாருடைய இச்சை சட்டமாக விளங்கிற்று. துரையுடைய சம்பளத்தைக் காட்டிலும் சிரஸ்தாரின் வருமானம் அதிகமானதென்று அக்காலத்தில் சொல்லிக்கொள்வார்கள். இது மிகைபட கூறலாயிருக்கலாம். என்றாலும் சிரஸ்தார் தன்னுடைய வரும்படிக்கதிகமாக செலவுசெய்து வந்தார் என்பது உண்மை.

இத்தகைய ஆகாயம் விஷத்தன்மைகொண்டதாக எனக்குத் தோன்றிற்று. ஆனால் இதில் கலந்துகொள்ளாமல் எவ்வாறு வாழ்வது என்று அனவரதமும் நான் சிந்தித்துக்கொண்டிருந்தேன்.

நான் மிகுதியும் மனச்சோர்வடைந்துபோனேன்; அதை எனது சகோதரர் தெளிவாகத் தெரிந்துகொண்டார். எனக்கு எங்கேனும் வேலை கிடைக்குமாகில் நான் இந்த சூழ்ச்சி ஆகாயத்தினின்றும் விடுபட்டு சுதந்திரத்துடன் இருக்கக்கூடுமென்று நாங்களிருவரும் உணர்ந்துகொண்டோம். ஆனால் சூழ்ச்சி செய்யாமல் மந்திரிப் பதவியோ நீதிபதிஸ்தானமோ கிடைப்பது அருமை. நான் துரையோடு சண்டைபோட்டுக் கொண்டதால் என்னுடைய வக்கீல் தொழில் செவ்வனே நடைபெறவில்லை.

போர்ப்பந்தர் அக்காலத்தில் இந்திய அரசாங்கத்தாரின் நிர்வாகத்தின் கீழ் இருந்தது. போர்ப்பந்தர் மன்னனுக்கு அப்போதைய அதிகாரத்தை விட அதிகமான அதிகாரத்தை பெற்றுக் கொடுக்கும் வேலையில் நான் சிறிது காலம் அமர்ந்திருந்தேன். மேலும் போர்ப்பந்தர் அரசியல் நிர்வாகியை நான் பார்க்க நேர்ந்தது. ‘மேர்’ வகுப்பார்களிடமிருந்து அரசியல் நிர்வாகி தாங்கமுடியாத வரி வாங்கினது சம்பந்தமாக நான் அவரை பார்க்க நேர்ந்தது. இந்த அதிகாரி இந்தியன் தான். இருந்தாலும் இவர் துரையைக் காட்டிலும் அகம்பாவம் உள்ளவர். இவர் திறமை உள்ளவர். எனினும் அவருடைய திறமையினால் விவசாயிகள் அதிகமான நன்மை அடைந்ததாகத் தெரியவில்லை. என்னுடைய முயற்சியினால் போர்ப்பந்தர் ராணா அவர்களுக்கு அதிகமான அதிகாரம் கிடைத்தது. ஆனால் ‘மேர்’ வகுப்பார்களுக்கு யாதொரு ஆறுதலும் கிடைக்கவில்லை. அவர்களுடைய முறையீடு போர்ப்பந்தர் அரசியல் நிர்வாகியினால் சரிவர கவனிக்கப்படவில்லையென்றுந் தோன்றிற்று.

எனவே என்னுடைய இந்த முயற்சியில்கூட நான் ஏமாற்றமடைந்தேன். என்னுடைய கட்சிக்காரர்களுக்கு நியாயம் கிடைக்கவில்லை யென்று எண்ணினேன். ஆனால் நியாயம் பெறுவதற்கான சாதனங்கள் என்னிடமில்லை. கடைசியாக அரசியல் ஏஜெண்டு அவர்களிடம் (துரையிடம்) மனுச் செய்து கொண்டிருக்கலாம். அல்லது கவர்னருக்கு மனுச் செய்து கொண்டிருக்கலாம். ஆனால் அவர்கள் நாங்கள் தலையிட மறுக்கின்றோம் என்று மனுவை தள்ளிவிட்டிருப்பார்கள். இத்தகைய முடிவுகள் சம்பந்தமாக ஏதேனும் ஒழுங்கான விதி யிருப்பின் அதைக் கொண்டு நமது குறைகளை நிவர்த்தித்துக்கொள்ளலாம். ஆனால் துரையின் இச்சைதான் சட்டம்.

எனக்கு கோபமுண்டாது.

இதனிடையேபோர்பந்தரிலிருந்து ஒரு மேமோன் கம்பெனியார் எனது தமையனாருக்கு பின் காணும் காகிதத்தை எழுதினார்கள்:—“எங்களுக்குத் தென்னாப்பிரிக்காவில் தொழில் நடக்கிறது. எங்களுடைய கம்பெனி பெரிய கம்பெனி. அங்கு நீதிஸ்தலத்தில் எங்களுக்கு பெரிய வழக்கொன்று இருக்கின்றது. வழக்கின் தொகை சுமாராக ௪௦௦௦௦ பவுன். வழக்கு நீண்டகாலமாக நடந்து கொண்டிருக்கிறது. அங்கு எங்களுக்காக பிரபல வக்கீல்களையும் பாரிஸ்டர்களையும் அமர்த்திக் கொண்டிருக்கிறோம். தாங்கள் தங்கள் தம்பியை அங்கு அனுப்பினால் அது எங்களுக்கும் உபயோகமாயிருக்கும். அவருக்கும் நன்மை உண்டாகும். அவர் எங்களுடைய வக்கீலுக்கு எங்களுடைய வழக்கை தெளிவாக எடுத்துரைக்க முடியும். மேலும் அவர் உலகத்தின் புதிய பகுதி யொன்றை காணவுங்கூடும். புதிய நண்பர்களும் அவருக்குக் கிடைக்கலாம்.”

இந்தக் கடிதத்தைப்பற்றி எனது தமையனார் என்னிடம் கலந்துயோசித்தார். வழக்கை வக்கீலுக்கு தெளிவாக எடுத்துரைப்பது எனது வேலையா, அல்லது நீதிஸ்தலத்தில் நானே வக்கீலாக ஆஜராக வேண்டுமா, என்பது எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை. என்றாலும் தென்னாப்பிரிக்காவுக்குப் போக நான் ஆசை கொண்டேன். தாதா அப்துல்லா கம்பெனி என்ற பிரஸ்தாபக் கம்பெனியின் பங்காளிகளில் ஒருவரான காலஞ்சென்ற சேட் அப்துல்கரீம் ஜாவேரி அவர்களிடம் என்னை என் தமையனார் அறிமுகப் படுத்திவைத்தார். சேட் அவர்கள் எனக்குப் பின்வருமாறு உறுதிகொடுத்தார்:—“வேலை கஷ்டமாயிராது; பெரிய துரைமார்கள் எங்களுக்கு நண்பர்கள். அவர்களுடைய நட்பு தங்களுக்குக் கிடைக்கும். எங்களுடைய கம்பெனியில் நீங்கள் எங்களுக்கு உபயோகமுள்ளவராயிருக்கலாம். எங்களுடைய கடிதப்போக்குவரவின் பெரும் பகுதி ஆங்கிலத்தில் நடைபெறுகின்றது. அது சங்கதியிலும் தாங்கள் எங்களுக்கு உதவிசெய்யலாம். தாங்கள் எங்களுடைய விருந்தினர் என்பது சொல்லத் தேவையில்லை. எனவே தங்களுக்கு யாதொரு செலவும் இல்லை.”

“என்னுடைய உதவியை தாங்கள் எவ்வளவுகாலம் வேண்டுகின்றீர்கள்? அதற்குத் தாங்கள் கொடுக்கக்கூடிய ஊதியம் என்ன” என்று நான் அவர்களைக் கேட்டேன்.

“ஒரு வருஷத்துக்கு அதிகமாயிராது. தங்களுக்கு முதல் கிளாஸ் கப்பல்படி தருகிறோம். தவிர இறுதியில் ௧௦௫ பவுன் கொடுக்கின்றோம்” என்றார் சேட் அவர்கள். தென்னாப்பிரிக்காவுக்கு நான் பாரிஸ்டராகப் போகவழியில்லை. கம்பெனியின் ஊழியனாக அங்குசெல்லநேர்ந்தது. ஆனால் எப்படியாவது இந்தியாவைவிட்டு எங்கேனும் செல்ல வேண்டுமென்று எனக்குத் தூண்டுதல் உண்டாயிற்று. இந்த ஏற்பாட்டினால் புதிய நாட்டைப் பார்க்கலாம். புதிய அனுபவத்தைக் கொள்ளலாம். மேலும் என் தமையனாருக்கு குடும்பச் செலவுக்காக ௧௦௫ பவுன் அனுப்பலாம். பேரம்செய்யாமல் இந்த ஏற்பாட்டை ஏற்றுக்கொண்டு, தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லச்சித்தமானேன்.

---

# தந்தி.

(ஊழியனுக்கு வந்த தந்தி.)

பிறங்கு ஆனி ௨௨

| | |
|---|---|
| உண்டியல்விலை | நூற்றிருபத்துநான்கு |
| ஈயம் விலை | நூற்று முப்பத்தாறு |
| ரப்பர் விலை | தொண்ணூற்றிரண்டு |

ரங்கூன் அக்ஷய-ஞூ ஆனி-மீ ௨௨

| | |
|---|---|
| கடப்பு வட்டி | [illegible] |
| தவணை வட்டி | ௦-௯-௦ |
| பவுன் விலை | ௧௯-௧௦-௦ |
| மொச்சை | ௫௯௦-௦-௦ |
| கடலை | ௯௧௦-௦-௦ |
| சிகப்பு மொச்சை | ௧௫௫-௦-௦ |
| வெள்ளை ” | ௧௯௦-௦-௦ |
| உளுந்து | ௫௨௫-௦-௦ |
| தட்டைப்பயறு | ௫௧௮-௦-௦ |
| பாசிப்பயறு | ௭௫-௦-௦ |
| மிம்பு | ௧௧௫-௦-௦ |
| மிளகாய் | ௧௫-௦-௦ |
| கொத்தமல்லி | ௫௫-௦-௦ |
| புளி | ௨௪-௦-௦ |
| கொள்ளு | ௯௦௦-௦-௦ |
| திப்பிலி | ௫௦௦-௦-௦ |
| படகு நெல் | ௨௧௫—௨௨௦-௦-௦ |
| ரயில் நெல் | ௨௦௦-௦-௦ |
| ஸ்பெஷல் அரிசி | ௪௧௫-௦-௦ |
| சிறியமில் ” | ௫௪௦-௦-௦ |
| பெரியமில் ” | ௫௯௦-௦-௦ |
| மீடாம் ” | ௫௧௭-௮-௦ |
| எஸ். க்யூ | ௫௯௦-௦-௦ |
| புழுங்கல் மில்சார் | ௫௧௫-௦-௦ |
| நசேன் ” | ௫௫௦-௦-௦ |
| ஏ ஒன் குருணை | ௫௧௦-௦-௦ |
| பி. ஒன் ” | ௪௧௦-௦-௦ |
| ஸி. ஒன் ” | ௪௭௫-௦-௦ |

---

# சிறுபிள்ளைத்தனம்.

சட்டசபைக் கௌன்சிலில் நமக்குத் துளிக்கூட நம்பிக்கை இல்லை என்பது நண்பர்கள் அறிந்த விஷயம். காந்தியடிகள் கட்டளைக்கிணங்கி, நாம் சுயராட்சியக்கட்சியாரின் செயல்களை ஆதரித்ததுமில்லை, ஆட்சேபித்ததுமில்லை. ஆணிவேரான அதிகாரங்கள் யாவையும் “வீடோ” என்ற நாகபாசத்தில் அடக்கிவைத்துக் கொண்டிருக்கும் வைஸிராய்களும் கவர்னர்களும் சட்டசபைகளையும் அவைகளின் தேர்தலின் போக்குகளையும் கண்டு அஞ்சுவதாக நடிப்பதைப்பார்க்க, நமக்குப்பிடிக்கவில்லை. மௌலானா யாகுப்ஹாஸன் சேட்அவர்கள் தமது சுயமதிப்பையும் விட்டு, தம்மேலிருக்கும் தடையை எடுத்துவிடுமாறு சென்னை அரசாங்கத்தாருக்கு மனுப்பண்ணிக்கொண்டும், அவர்கள் மனம் இசையவில்லை. தோல்வியுற்று சரண் புகுந்த எதிரியைக்கூடமேலேபோன்ற தடைகளினால் குத்துவது வேந்தருக்கு யுத்ததருமமல்ல; அது உயர்ந்த மனித இயற்கையையும் காண்பிப்பதாகாது. ஜனங்களுடன் ஒத்துவாழ விருப்பம் கொள்ளாத அரசாங்கங்கள் ஏனைய நாடுகளில் அடியோடு தொலைந்து போயின என்பது சென்னை அரசாங்கத்தாருக்குத்தெரியாதா? ஜனங்களும் அரசாங்கமும் ஒருமனப்பட்டு வாழவேண்டும் என்பது நமது அழியா விருப்பம். சென்னை அரசாங்கத்தார் குழந்தைகளைப்போல முன்பின் யோசியாமல் கருமம் செய்யலாகாது என்றுபெரிதும் ஆசைப்படுகிறோம்.

## பொருள் அடக்கம்.



ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெறும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் நிலமேற் கொண்டேன்.

காரைக்குடி
அட்சய-[illegible] ஆனி-மீ அ-௨

# தமிழ்ப் — — — பல்கலைக் கழகம்.

அன்னிய ஆட்சி உலவும் நாட்டில், அரசாங்கத்தாருக்கு ஒரு சங்கதியில் கருணை பூக்குமாயின், அது பொது ஜனங்களுக்கு கவலையை அளிப்பதாகும். இந்தியர்கள் சுயராஜ்யக் கிளர்ச்சி செய்தார்கள். அரசாங்கத்தாரின் இதயம் மாறினதுபோலக் காணப்பட்டது. முடிவு என்ன? இரட்டையாட்சி மாயம் வெளித்தோன்றிற்று. சட்டசபையின் ஆளுகைக்கு அடங்காத அரசியல் நிர்வாகம் நடந்து கொண்டேயிருக்கிறது. சட்டசபைப் பெரும்பான்மை அரசாங்கத்தாருக்குச் சார்பாயிருப்பின்—சென்னை மாகாணத்தில் இருப்பதுபோல—அந்தப் பெரும்பான்மை உத்தியோகப் பற்றில்லாதது என்று சொல்வதில் பயனில்லை. சட்டசபைப் பெரும்பான்மையார் அரசியலார் விருப்பத்துக்கு இணங்காவிடின், அவர்களுடைய தீர்மானங்களை நிராகரிக்க கவர்னர்களுக்கும் வைஸிராயக்கும் அதிகாரமுண்டு. எனவே உத்தியோகப் பற்றில்லாத பெரும்பான்மை கொண்ட சட்டசபையை, அரசாங்கத்தார் ஆக்கித் தந்தார்களெனின், அதிலே சூதுஇருக்கிறது என்று அனுபவ மூலமாய் ஜனங்கள் உணர்ந்து வருகிறார்கள்.

ஆந்திரப் பல்கலைக் கழகம் நிறுவ வேண்டும் என்று ஆந்திர நாட்டார் கிளர்ச்சி செய்தார்கள். அவர்களுடைய கிளர்ச்சி பயன்பெற்று விட்டது. உடனே தமிழ் நாட்டிலே பலர் கிளர்ச்சி செய்தார்கள். தமிழ்ப் பல்கலைக் கழகம் வேண்டுமென்றார்கள். இந்த யோசனையைப்பற்றி விசாரிக்க ஒரு கமிட்டியை சென்னை அரசாங்கத்தார் நியமித்திருக்கிறார்கள். அவர்களின் பெயர்களும் விசாரணையின் எல்லையும் மற்றோர் பக்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. பெயர்களைக் கண்டு நாம் மனம்சோர்ந்துபோனோம். மரத்தின் தன்மையை அதன் பழங்களைக் கொண்டு அறியவேண்டும் என்பார்கள். கமிட்டியின் அங்கத்தினர்களைப் பார்த்தால், இனி ஏற்படப்போகும் பல்கலைக் கழகத்தின் தன்மை இனிது விளங்கும்.

கமிட்டியின் அங்கத்தினர்கள் தங்கள் தனிப்பட்டவாழ்வில்நல்லவர்களாயிருக்கலாம்; அறிவாளிகளாயிருக்கலாம்; நிபுணர்களாயிருக்கலாம். அவைகளை நாம் மிகுதியும் கவனிக்கவேண்டியதில்லை. கமிட்டி அங்கத்தினர்கள் யாவரும் அரசாங்கத்தை ஏதேனும் ஒருவகையில் சார்ந்திருப்பவர்கள். எனவே அவர்கள் இந்திய ஜனசமூகத்தின் பொதுவாழ்வின் புதிய போக்கை அறியக்கூடிய சந்தர்ப்பங்கள் வாய்க்கப் பெறாதவர்கள். காங்கிரசுக்காக, எனவே பொது ஜனங்களுக்காகப் பாடுபட்டு உழைக்கும் தமிழ் நாட்டுத் தலைவர்களின் பெயர் ஒன்றாவது கமிட்டியில் காணப்படவில்லை. எனவே சென்னை அரசாங்கத்தாரின் நோக்கம் வெளிப்படை. அதை விரித்துரைக்கத் தேவையில்லை.

கனம் கமிட்டியார்கள் தமிழ் மொழியில் போதனை செய்யமுடியாது என்று தான் முடிவு கூறப்போகின்றார்கள். இதில் சிறிதும் ஐயமில்லை. இதற்கு ஜோதிடனாலும் தேவையில்லை. இங்கே, அங்கே, தமிழ் மொழிப்பற்றுடைய அங்கத்தினர்கள் கமிட்டியில் ஒரு சிலர் இருக்கலாம். கார்ட்டி, கார்டினர் பாதிரிமார்கள் முதலியவர்களுக்கு தமிழ்எழுத்து வாசனைகூட இருக்காது. தமிழ்மொழி கடைப்பட்ட மொழி என்ற எண்ணம் அவர்களைவிட்டு அகன்று நிற்குமா? தமிழ்மொழியில் போதனை செய்யத் தவறும் ஒரு சர்வகலாசாலையை தமிழ்ப் பல்கலைக்கழகம் என்று பெயரிட்டழைப்பது சிறிதும் பொறுத்தமுள்ளதாகாது.

தமிழ் மொழி சங்கதிதான் மேற்கூறியவாறு ஆகப்போகின்றதே! பல்கலைகளைப்பற்றி என்ன? சென்னைப் பல்கலை கழகத்தின் ஆதீனத்துக் கடங்கிய கல்லூரிகளில், என்ன பல்கலைகள் போதிக்கப்பட்டு வருகின்றன? கணிதம், பௌதிகநூல், சரித்திரம், தத்துவம் முதலியன கற்பிக்கப்படுகின்றன என்று கூறலாம். இந்தக் கலைகளின் அறிவினால், கலெக்டர் அவர்களின் கையெழுத்துக்குக் காகிதத்தை நீட்டும் குமாஸ்தா பீ. ஏ. க்களுக்கு என்ன பயன்? வானநூல் ஆராய்ச்சியைப் பற்றிய கட்டுரை கலெக்டர் அவர்களுக்குத் தேவையில்லை. சரித்திரம் படித்து புரட்சி எண்ணங்களைக் கொண்ட குமாஸ்தாக்கள் கலெக்டர்களுக்கு வேண்டாம். எனவே பல்கலைப் போதனையால் நமது இளைஞர்களுக்கு என்ன பயன் உண்டாகும்?

தொழில் கல்வியை புதிய கமிட்டியார் ஆதரிக்கப்போவதில்லை. ஆதரித்தாலும், மேநாட்டு இயந்திரத் தொழில்களை ஆதரிப்பார்கள். அதாவது மேநாட்டு வியாபாரிகளுக்கு கமிட்டியார் தரகர்களாக மலர்ந்து விடுவார்கள். இந்தியத் தொழில்களை கமிட்டியார் ஆதரிப்பார்கள் என வைத்துக்கொள்ளுவோம். இதற்கு அரசாங்கத்தார் இடங்கொடுக்கப்போவதில்லை. உத்தியோகப் பற்றற்ற சட்டசபைப் பெரும்பான்மை, மந்திரிகள் என்ற பெயர்களைக் கேட்டு, நம்மில் பலர் ஏமாந்து போனதுபோல, தமிழ்ப் பல்கலைக்கழகம் என்ற முழக்கமான பெயரைக் கேட்டு எவரும் ஏமாந்து போக வேண்டாம். இதைப் பற்றி பின்னர் விரிவாக எழுதுவோம்.

---

## கொடிது! கொடிது!!

குற்றத்துக்கு தண்டனை விதிப்பது மனிதர்களுடைய மதிக்குறைவைக் காண்பிப்பதாகும். தண்டனைகளின் மூலமாய், குற்றம் இந்த உலகத்தை விட்டு நீங்கவேயில்லை. தண்டனை ஸ்தலங்களாகிய நீதி ஸ்தலங்கள் இப்பொழுது உலகத்தில் பெருக்கடைந்து வருகின்றன. அதன் பொருள் என்ன? குற்றங்களும் அதிகரித்து வருகின்றன என்பது அதன் பொருளாகும். சுயமதிப்பையும் அறவுணர்ச்சியையும் சக்தியில் ஆவலையும் மனிதர்களின் உள்ளத்தில் புகுத்தினாலொழிய, இந்த உலகத்தில் குற்றங்கள் குறையமாட்டா. சிறைகளையும் தண்டனையையும் குறைத்து, பள்ளிகளையும் அன்பையும் வளர்த்தாலன்றி, குற்றங்கள் ஒழியமாட்டா. உலக அறிஞர்கள் இந்த உண்மையை சிறிது சிறிதாக அனுபவமூலமாய் உணர்ந்து வருகிறார்கள்.

தண்டனையைக் குறைக்க வேண்டுமென்றால், மரணதண்டனையைப்பற்றி என்ன சொல்லுவது? இரத்தத்துக்கு ஆச்சரியமான ஒரு தன்மை உண்டு. எதன் பொருட்டாயினும்—அது நல்ல காரியமாயினும், தீய கருமமாயினும் சரியே—ஒரு துளி இரத்தம் சிந்தப் பெற்றாலும், அது ஜனங்களின் மனதைக் கவரும் தன்மை கொண்டது. ஆழ்ந்து யோசித்தால், குற்றம் செய்யாதவன் உலகத்திலேயே இல்லையெனச் சொல்லலாம். ஒரு வகைக் குற்றவாளி நீதிபதியின் தண்டனைக்கு ஆளாகின்றான். வேறுவகைக் குற்றவாளி நீதிபதியாகின்றான். குற்றம் குறைவில்லாத மனிதர்கள் அகப்படுவது அருமையாதலின், தண்டனையினால் கோரியபயன் உண்டாவதில்லை. மேலும் மரணதண்டனை விதிப்பதற்கு மனிதனுக்கு உரிமை சிறிதும் இல்லையெனச்சொல்லலாம்.

மனிதனுடைய தீயகுணத்தை அன்புகொண்டு மாற்ற, சகோதர மனிதனுக்கு உரிமை உண்டு. மாற்ற வகையறியாதவர்கள் மரண தண்டனை என்ற போர்வையில் நுழைந்து அடைக்கலம் பெறுகின்றார்கள். அடைக்கலம் என்பதே சக்திக்குறைவைக் காண்பிக்கின்றது. ஒருவனுடைய சக்திக்குறைவை மற்றவனுடைய குற்றமாக எடுத்துக் கூறி, அதற்கு தண்டனை விதிப்பது கொடுங் குற்றமாகும்.

இதுவரையிலும் நாம் பொதுப்படப் பேசினோம். தண்டனைதான் கொடிதாயிற்றே. அதை விதிக்கும் முறையோ இன்னும் கொடிதாக விருக்கின்றது. தண்டனையில் பட்சபாதம் என்ன அநியாயம்! தோட்டத் தொழிலாளியை உதைத்துக் கொல்லும் வெள்ளையன் வெறும் அபராதத்துடன் வீடுபோய்ச் சேருகின்றான். வெள்ளை நிறத்தவனை அவமதிக்கும் கறுப்பன் கடுங்காவல் பெறுகின்றான். இந்தியாவில் இத்தகைய நிகழ்ச்சி சாதாரணம். நிறம் தண்டனை முறையை வேறுபடச் செய்கின்றது.

கிழாப்பிரிக்கா, கெனியா நாட்டில் புதிய சட்டம் ஒன்று ஏற்படப்போகின்றதாம். வெள்ளைக்கார ஸ்திரீயைப் புணர்ந்த சுதேசி மரண தண்டனை விதிக்கப் பெறுவானாம்! பலவந்தமாய்ப் புணர்ச்சி செய்பவனுக்கு, ஒருவேளை இந்தக் கொடிய தண்டனை பொருத்தமுள்ளதாக விருக்கலாம். சம்மதப் புணர்ச்சிக்கு விவாகத்தை ஒன்றே மார்க்கமென கண்டு, அதை அனுபவத்தில் காட்டிவரும் ஆங்கிலேயர்கள் கெனியாவில் வேறுவகைச் சட்டத்தைக் காண ஆவல் படைத்து நிற்கின்றார்கள். கறுப்பு, சுதேசி ஸ்திரீயிடம் புணர்ச்சி வைத்துக்கொள்ளும் வெள்ளையனை என்ன செய்வது? இதைப்பற்றி கவனிப்பது புதிய சட்டத்தின் வேலையல்லபோலும்! பணச்செருக்காலும் நிறச்செருக்கா[illegible] விளையும் சட்டங்கள், அவைகளை [illegible]கும் ஜனசமூகத்தின் படுகுழிகள் என்[illegible]பதை கெனியா வெள்ளையர்கள் எப்பொழுதேனும் உணர்வார்களா?

---

## பூரண மதுவிலக்கு.

சாராயம், கள்ளு ஸர்க்காரின் சொத்துக்கள். அவைகள் கூடா என்று கூறுபவர்கள், அரசாங்கத்தின் சொத்துக்களைப் பறிமுதல் செய்யும் கெட்ட எண்ணம் கொண்டவர்கள் என அரசாங்கத்தாரால் மதிக்கப்பட்டு வருகின்றார்கள். கள் குடிப்பது பா[illegible]



என உலக மதங்கள் யாவும் கூறுகின்றன. கள் குடிப்பதைத் தடுப்பது குற்றம் என இந்திய அரசாங்கத்தார் சட்டம் செய்து கொண்டிருக்கிறார்கள். கள்ளுக்கடை மறியல் செய்தால், அது பொதுஜன அமைதியைக் குலைத்துவிடுமாம்? மேலும் கலால் இலாகாவினால் வருஷா வருஷம் வரும் வருமானம், பூரண மதுவிலக்கினால் ஒழிந்துபோகும் என அரசாங்கத்தார் வாதாடுகின்றார்கள். இது மாயாவாதம்.

டாக்டர் பெர்குஸன் அவர்கள் உதகமண்டலத்தில் சின்னாட்களுக்கு முன்னர் பூரண மதுவிலக்கைப்பற்றி ஒரு பிரசங்கம் செய்திருக்கிறார். பூரண விலக்குச்செய்த அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களில், செல்வம் சில ஆண்டுகளாகக் கொழித்து நிற்கின்றது என்று அவர் கூறுகின்றார். கள் குடிப்பது நின்றுபோனால், குற்றங்கள் குறையும் என்று அவர் கூறும் உண்மையை நாம் ஏற்றுக்கொள்ளுகிறோம். குற்றங்கள் குறைந்துபோகுமாயின், போலீஸ், சிறை இலாக்காக்களின் செலவு எவ்வளவு குறையும்? இது அரசாங்கத்தாருக்குத் தெரியாதா? தெரியும்.

ஆனால் காரணம் வேறு. அன்னிய ஆட்சியின் அடித்தளங்கள் சிறையும் போலீசும். எந்தக்காரணத்தைக்கொண்டும், இவைகளின்பேரில்விழும் செலவை அரசாங்கத்தார் குறைக்க எண்ணமாட்டார்கள். குற்றங்கள் அதிகரித்தாலல்லாமல் தங்களுக்கு ஜனங்களின் பேரில் உள்ள பிடிப்பு அற்றுப்போகும் என்று அரசாங்கத்தார் எண்ணுவார்களாயின், அவர்களுடைய மனதை எளிதிலே மாற்றமுடியுமா?

தொழில்களை விருத்திசெய்து, சுயமதிப்பையும் பொறுப்பையும் ஜனங்களின் மத்தியில் வளர்த்துவிட்டால், ஜனங்கள் கள்ளு சாராயத்தில் மோகம் கொள்ளுவார்களா? ஜனங்களின் பொறுப்பை வளர்த்துவிட்டால், பொறுப்பற்ற அன்னிய ஆட்சிக்கு அரைக்கணமேனும் தங்குமிடம் இந்த நாட்டில், இந்த நாளில் இருக்குமா? ஏழை ஜனங்கள் மதிமோசத்தினால், தங்கள் துயரத்தைச் சிறிது நேரமாகினும் மறந்துவாழ, கள்ளுக் குடிக்கிறார்கள். கள்ளைத் தங்கள் உடலுக்கு மருந்தாக ஏழைகள் எண்ணுவதில்லை. கள்ளைத் தங்கள் உள்ளத்தளர்ச்சிக்கு மாற்றாக ஏழைகள் கருதுகின்றார்கள்.

எனவே பொறுப்புள்ள அரசாங்கத்தின் கடமை என்ன? ஜனங்களின் உள்ளத்தளர்ச்சியைப் போக்குவது அரசாங்கத்தின் கடமையாகும். தங்கள் சொந்த நலம் என்று ஒன்று எந்த அரசாங்கத்துக்கும் கிடையாது. ஜனங்களின் பொது நலமே, அரசாங்கத்தின் நலமாகும். அவ்வாறிருக்க, ஏழைகளின் நலத்துக்கென உழைப்பதாகப் பாவனைபேசும் இந்திய அரசாங்கத்தார் பூரண மதுவிலக்கில் பூரண சிரத்தைகொள்ளவேண்டும். அவர்கள் ஊக்கம் எடுத்துக்கொள்ளுமாறு தூண்டுவது பொதுஜனங்களின் கடமையாகும். கதரினால் சுயராஜ்யம் வரும் என்று காந்தி கூறுகின்றார். பூரண மதுவிலக்கையும் கதருடன் சேர்த்துக் கொண்டால், சுயராஜ்யம் விரைவில் வரும் என்பது உறுதி.

---

## இடிமுழக்கம்.

### நீடூழிவாழ்க!

சோம்பல் அம்பலம் வேகுதே என்று சொன்ன சோம்பேறிக்கு, அதைச் சொல்ல வாயைத்தான் வலிக்காதோ என்று வேறொரு சோம்பேறி சொன்னதாகவும் இவையிரண்டையும் மறுத்து மூன்றாவது சோம்பேறி சிறுகூச்சலிட்டதாகவும் கதை சொல்லுவதுண்டு. "நமது நாடு இப்பொழுது நல்ல நிலையில் இல்லை. நாட்டின் நிலையை மாற்றுவதற்கு, கதர் ஒப்பற்ற சாதனம்" என்று எவரேனும் சொன்னால், மேற்கூறிய சோம்பலம்பல நண்பர்களைப்போல, பலர் ஏளனம் செய்கின்றார்கள். சோம்பலே நமது வீழ்ச்சிக்குக் காரணம் என்று அவர்களுக்குத் தெரிந்திருக்குமாயின், அவர்கள் இவ்வாறு பரிகாசம் செய்யமாட்டார்கள். தெரியாதவர்களுக்கு தெரிந்தவர்கள் உண்மை அனுபவத்தை எடுத்துரைக்க வேண்டியது அவசியம். இந்த நல்வழியைப் பின்பற்றி, மைசூர் மகாராஜா அவர்கள் நாளொன்றுக்கு ஒரு மணி நேரம் ராட்டினத்தில் நூல் நூற்கின்றார் எனக் கேள்விப்பட்டு, நாம் மகிழ்ச்சியடைகின்றோம். கதரை விரைவில் நாட்டில் பரப்பி, அபிவிருத்தி செய்ய வேண்டும்என மைசூர் சமஸ்தானம் தொழில் இலாகா கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறதாம். மேலும் மைசூர் அரண்மனையில் மட்டும் சுமார் அறுநூறு ராட்டினங்கள் வரையில் சுற்றிக்கொண்டிருக்கின்றனவாம். ஆடம்பரமின்றி, மௌனமாய் கதர்த்தொண்டு ஆற்றும் மைசூர் மகாராஜா அவர்கள் நீடூழி வாழ்க என்று மனதார, நாம் புகழாமல் இருக்கமுடியுமா? ஏனையோர்களுக்கு மகாராஜாவின் தொண்டு, நல்ல படிப்பினையாக விருக்கும் என்பதில் ஐயமில்லை.

### உலக குருவாம்!

உலகத்தில் பிரம்மஞான சபை என்று ஒரு சங்கம் இருப்பதை நண்பர்கள் அறிவார்கள். அந்த சங்கத்துக்கு இலட்சக்கணக்கான அங்கத்தினர்கள் உலகத்தின் பல பகுதிகளிலும் இருக்கிறார்கள். இந்தச் சங்கத்துக்கு ஸ்ரீமதி பெஸண்டு அம்மையார் தலைமை வகிக்கின்றார்கள். உலக குரு தோன்றப்போகின்றார் என்று நீண்ட காலமாக பிரம்மஞான சபையார் கூறி வந்தார்கள். இத்துறையில் முனைந்து நின்ற ஸ்ரீமதி பெஸண்டு அம்மையார், சென்னையில் ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி என்ற இளைஞனை சிறு பிராயமுதற்கொண்டு வளர்த்துவந்து, உலக குருவாக்க முயன்று வந்தார்கள். சில நாட்களுக்கு லண்டன் நகரில் கூடிய உலக பிரம்மஞான சபைக் கூட்டத்தில், ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அறுநூறு வோட்டுகளால் உலக குருவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்று அறிகிறோம். ஜனநாயகத் தேர்தல் முறை மத சங்கதிகளில்கூட ஏறி, ஊறிப்போயிருப்பதைக் கண்டு, நமக்குப் பெருமகிழ்ச்சிதான். ஆனால் நமக்கு ஒரு சந்தேகமுண்டு. அக்கினிப்புடம் வைத்து வைத்தியர்கள் மருந்தைத் தயார் செய்வதுண்டு. மருந்தை ஆக்கும் வைத்தியர்கள் மருந்தைக் காட்டிலும் பெரியவர்கள். வோட்டுப் புடம் வைத்து, உலக குருவை ஆக்கிய பிரம்ம ஞான சபையாரின் பெருமையையும் திறமையையும் பற்றி, நம்மால் என்ன கூற முடியும்? தேர்தல் புடத்தால் வெளித்தோன்றிய உலக குருவின் நிலைமை—சங்கடம் என்று சொல்லவும் வேண்டுமா? அடுத்த தேர்தலில் அவர் கதி என்னவாகுமோ, யார் கண்டார்?

### சூழ்ச்சியின் பயன்.

சுதேச சமஸ்தானங்களின் அதிபதிகள் அவைகளின் மன்னர்கள் என்று எண்ணி ஜனங்கள் ஏமாந்து போயிருப்பார்கள். சமஸ்தான அரசியல் நிர்வாகத்தை தமது கைக்குள் அடக்கிவைத்திருப்பவர் ரெஸிடண்டு துரையவர்கள். பொதுவாக ரெஸிடண்டுகள் ஐ. ஸி. எஸ் வகுப்பைச் சேர்ந்த ஆங்கில உத்தியோகஸ்தர்களாகவிருப்பார்கள். இந்திய அரசாங்கத்தாரின் விருப்பத்துக்கு இசைந்தவாறு, சுதேச ஸமஸ்தானங்களும் நடைபெறும்பொருட்டு, மேற்கூறிய ரெஸிடெண்டுகள் துணைக்கருவிகளாயிருப்பர். திருவாங்கூர் ஸம்ஸ்தானத்தில், இப்பொழுது, அச்சுக்கூடங்களைப்பற்றி கடுமையான உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. ஜனசமூகத்திலும் அரசியல் நிர்வாகத்திலும் சீர்திருத்தங்கள் வேண்டுமெனக் கிளர்ச்சி செய்யும் பத்திரிகைகளின் தலைகளின்பேரில், இந்த உத்தரவு இடிபோல விழுந்துவிட்டது. இத்தகைய பத்திரிகைகள் பெருந்தொகையை ஜாமீனாகக்கட்டவேண்டும் என உத்தரவு பிறந்திருப்பதாகவும் அரசாங்கத்தை ஆதரிக்கும் பத்திரிகைகள் எளிதிலே விடப்பட்டதாகவும் அறிகிறோம். இந்தப் பட்சபாதம் ஏனோ? இந்தப் பட்சபாதம் காண்பிக்கும் பொருட்டே, புதிய அச்சுக்கூட உத்தரவு பிறந்திருக்கிறது என்று சொல்லுவது அருமையா? மேலும் இந்தப்புதிய உத்திரவைப் பிறப்பிக்கவே, ரீஜண்டு மகாராணியாருக்கு அதிகாரமில்லை என்பது பலசட்ட நிபுணர்களின் கருத்து. தோட்டம் நிலைப்பதற்குள்ளாகவே, தென்னம்பிள்ளை வைக்கும் திருவாங்கூர் ஸமஸ்தானத்தில், ரெஸிடெண்ட் அவர்களின் சூழ்ச்சி மலிந்து வருகிறது.

### பாத்திய முண்டாம்!

மொரோக்கோவில் சுதந்திரத்தின் பொருட்டு அரும்பாடுபட்டு பிரஞ்சுக்காரர்களையும் ஸ்பானியர்களையும் எதிர்த்து வந்த ரிப் ஜாதியார் முறியடிக்கப்பட்டு, தோற்றுப் போயினர். ரிப் ஜாதியாரை நவீன நாகரிக முறையில் தயார் செய்து அவர்களை மேற்பார்க்கும் பாத்தியம் பிரான்சு நாட்டுக்கும் ஸ்பெயின் நாட்டுக்கும் உடன்படிக்கை மூலமாய்க் கிடைத்திருக்கின்றதென்றும் ரிப் ஜாதியாரின் பதவியை நிர்ணயிக்க சர்வதேச மகாநாடு தேவையில்லை என்றும் பிரஞ்சு முதல் மந்திரி பிரியான் அவர்கள் கூறுகின்றார். நாகரிக முறையில் தயார்செய்வது, மேற்பார்வை பார்ப்பது என்ற சொல் தொடர்களுக்கு அரசியல் உலகத்தில் பொருள் வேறு. தெளிவான பாஷையில் கூறுமிடத்து, அவைகளுக்கு ஸ்தந்திரப்பறி முதல் என்று பொருள். கறுப்பு மனிதர்களை மேற்பார்வை பார்க்கும் உரிமையை, தங்கள் குண்டு துப்பாக்கி என்று சொல்லுவதற்கு பதிலாக, உடன்படிக்கை என்று பிரியான் அவர்கள் நாகரிகமாகப் பேசுகின்றார். தங்கள் சுதந்திரத்தைப் பறிகொடுத்து, தாங்கள் அடிமைகளாக வாழ விரும்புகின்றார்கள் என்று ரிப் ஜாதியார் பிரஞ்சு மந்திரிமார்களுடன் உடன்படிக்கை செய்துகொண்டார்களா? அவ்வாறாயின், அது நவீன நாகரிகத்துக்கு இசைந்த உடன்படிக்கையாகத்தான் இருக்க வேண்டும். இத்தகைய நாகரிக வாழ்வுக்கு ரிப் ஜாதியார் இவ்வளவு எளிதிலே தயாராகிவிட்டனரா?

### பரஸ்பர ஒத்துழைப்பு.

பரஸ்பர ஒத்துழைப்பு என்பது இப்பொழுது எங்கும் பேச்சாகியிருக்கிறது. இந்தக் கூட்டத்தார் பிறந்து வளர்ந்த வகை விநோதமானது. இந்தக் கூட்டத்தில் பல திறப்பட்டவர்கள் கலந்துகொண்டிருக்கிறார்கள். மிதவாதிகள், காங்கிரஸ் வாதிகள் முதலியவர்கள் இக்கூட்டத்தின் முதுகெலும்புகள். மிதவாதிகளும் ஒத்துழையாத காங்கிரஸ் வாதிகளும் எவ்வாறு கூடிக்கொண்டார்கள்? காலத்தின் கோலம் எனத் தத்துவம் அல்லது விகடம் பேசலாம். ஆனால் காரணமின்றிக் காரியமில்லை என்ற உண்மையை அறியவேண்டும். மிதவாதிகளை அரசாங்கத்தார் தட்டிக் கொடுத்த காலம் போய்விட்டது. மேலும் அவர்களுக்கு நாட்டிலும் செல்வாக்கு இல்லை. ஒத்துழையாதார்களில் சிறு கூட்டத்தாருக்கு காங்கிரசில் செல்வாக்கு கிடைக்கவில்லை. மிதவாதிகளுக்கு ஏற்கனவே காங்கிரசின் பேரில் வருத்தம்; இப்பொழுது அவர்களுக்கு அரசாங்கத்தாரின்மீது கோபம். ஐயகரையொத்த ஒத்துழையாதார்களுக்கு பண்டைக் காலந்தொட்டு, அரசாங்கத்தாரிடம் வெறுப்பு; இப்பொழுது அவர்களுக்கு காங்கிரசின் மீது கோபம். எனவே, இனம் இனத்தோடு சேரும் என்று சொல்லவும் வேண்டுமா? ஸ்ரீமான் ராம அய்யங்கார் அவர்கள் சுயராஜ்யக் கட்சிக் கதவை இடித்துப்பார்த்தார். கதவு திறப்பதற்கு வழியைக்காணோம். இப்பொழுது அவர் பரஸ்பர ஒத்துழைப்பாளராகிவிட்டார். நாம் தலைப்பில் கூறிய வாதமுறைக்கும் முடிவுக்கும் ஸ்ரீமான் ராம அய்யங்கார் அவர்கள் இலக்கு என்று சொல்லத் தேவையில்லை.

### பொய் பிடிக்கவில்லை.

சென்ற ஐரோப்பியப் போருக்குப் பின்னர் தோன்றிய பொய்களுக்குள் சர்வதேச சங்கம் என்பது ஒரு பொய். யுத்தத்திலே வெற்றி பெற்ற நாடுகள் தோற்றுப்போன நாடுகளையும் அவைகளையொத்த பலவீனங்கொண்ட நாடுகளையும் மேலெழவொட்டாமல் தடுக்கும் பொருட்டு செய்து கொண்ட உடன்படிக்கை, சர்வதேச சங்கம் என உயிர்த்தெழுந்து, உருவம் படைத்தது. உலக சமாதானத்தை நிலை நாட்டும் பொருட்டு, சர்வதேசசங்கம் தோன்றியதாக மட்டும் வெளிப்பேச்சு. ஐரோப்பிய நாடுகளில் யுத்தத்தால் ஏற்பட்ட குழப்பமும் பகைமையும் தணிந்தும்கூட, ஜர்மனியையும் ருஷியாவையும் தனது அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ள, சர்வதேச சங்கம் மனம் இசையவில்லை. உலக சமாதானத்தை சர்வதேச சங்கம் நாடுவது மெய்யானால் ஜர்மனியையும் ருஷியாவையும், ஏன் சங்கம் விலக்கி வைக்கவேண்டும்? சர்வதேச சங்கத்தின் இந்தத் தீர்மானத்தினால், அதன் உண்மையான இயல்பு வெளித்தோன்றி விட்டது. சர்வதேசச் சங்கத்தின் பொய் வேஷத்தைக் கண்டு மனம் பொறுமல், தென் அமெரிக்காவிலுள்ள பிரேஸில் நாடு சங்கத்தினின்றும் விலகிக்கொள்ளத் தீர்மானித்து விட்டதாக அறிந்து சந்தோஷமடைகின்றோம். நல்லவர்கள் வாய்திறந்து முன்னுக்குவந்தாலொழிய, பொய்களின் வேலையும் வேஷமும் அழியமாட்டா.

### வீரப் பெண்மணிக்கு வாழ்த்து.

வட இந்தியாவில் ரெயில் திருட்டு அதிகம். துணையின்றிப் போகும் பெண்களின் நகை, சொத்துக்களை களவாடி உயிர் பிழைக்கும் மனித மிருகங்கள் பல அந்த நாட்டில் இருக்கின்றனவாம். சமீபத்தில் இந்தக் கூட்டத்தைச் சேர்ந்த சிலர் மோகல்ஸராய் ஸ்டேஷனில், ரயில் வண்டியிலேறி, தனித்து தனது குழந்தையுடன் உட்கார்ந்திருந்த மார்வாரிப் பெண்மணியைத் தாக்கினார்களாம். ஒன்றுக்கும் அஞ்சாமல் அந்த பெண்மணி திருடர்களைத் தாக்கி, அவர்களில் ஒருவனோடு கைக்குத்து சண்டை செய்ய, இருவரும் ரெயில் வண்டியிலிருந்து விழுந்து இறந்தனராம். பெண்மணி இறந்து போனதை குறித்து நமக்கு வருத்தம். ஆனால் அவளுடைய தீரத்தனத்தைக் கண்டு, நமக்கு ஆவேசம் உண்டாகின்றது.

---

## உள்ளூர்.

| | |
|---|---|
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | ௧—௪—௦ |
| சென்னை உண்டியல்வட்டம் | ௦—௫—௦ |
| பவுன் (பொற்காசு) | ௧௩—௧—௯ |
| வெள்ளி ரூபாயிடை. | ௦—௧௧—௯ |

கதர்:—இந்நகரிலுள்ள காங்கிரஸ் கத்தர் கடையில் இம்மதி ௧௪-ம் நாள்முதல் ௧௯-ம் நாள்வரை ௬-நாட்களில் ரூபாய் ௭௧௫—௧—௯க்குக் கதர்துணிகள் விற்பனையாயிருக்கிறதென அதன் காரியஸ்தர் அறிவிக்கிறார்.

கக்கூஸ்:—பொதுவாக இவ்வூரில் கக்கூசே கிடையாது. (யூனியன்போர்டு ஆதரவில்) இயந்திரவண்டி நிலையம்—சந்தை—போன்ற முக்கிய இடங்களில்கூட கக்கூஸ் ஏற்பாடுசெய்யாமலிருப்பதிலிருந்து நகரவாசிகள் பிரயாணிகள் முதலியவரின் நன்மையை யூனியன்போர்டார் எவ்விதம் கவனிக்கிறார்கள் என்பது வெளிப்படையாகத் தெரிந்ததேயாகும். இம்மாதிரியெல்லாம் நடப்பது இத்தனவணிகர் நாட்டில் இயற்கையாகிவிட்டது. வாக்காளர்கள் விழித்துக் கொண்டாலல்லது கதியில்லை.

நியமனப் பதவி:—இவ்வூர் யூனியன் போர்டு தலைவர் ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார் தேவகோட்டை தாலூக்கா போர்டின் நியமனத் தலைவராகி விட்டபடியால், அவர் வகித்துள்ள தலைவர் பதவி காலிசெய்யப்பட வேண்டியது நியாயமாகும். அவர் தலைவர் பதவியை ராஜீனாமாச் செய்யும்போது அ வ ய வ ப் பதவியையும் சேர்த்து ராஜீனாமாச் செய்யப்போவதாகச் சொல்லப்படுகிறது. அந்தத் தன்மையானால் அவ்யவிப் பதவிக்கு புதிதாக ஒருவரை நியமித்தல் வேண்டும். நியமிக்கும் அதிகாரம் தாலூக்காப் போர்டு பிரசிடெண்டுக்கே உரியது. அன்னார் தாழ்ந்த வகுப்பினர்க்கே அந் நியமனத்தைச் செய்வாரா என்பது சந்தேகம். அப்பதவிக்கு திருவாளர் களான சு. அ. சு. ராம. ராமனாதன் செட்டியார், முரு. வீர. சாமிநாதன் செட்டியார், முதலியவர்களின் பெயர்கள் அடிபடுகின்றன. முன்னவர் ராவ்பகதூரின் மாப்பிள்ளை பின்னவர் ராவ்பகதூரின் சிநேகர். இன்னும் சில தனவணிகர் பெயர்களும் பிரஸ்தாபிக்கப்படுகின்றன. ஆனால் அவ்வளவு பலமாய் அடிபடவில்லை. தாழ்த்தப்பட்டவர்க்குள்ள நியமனப்பதவி பெரிய மெஜாரிட்டியுள்ள ஒருவகுப்பினர்க் குரியதாக்குவது எவ்வகையாற்றானும் நியாயமல்ல. தாழ்த்தப்பட்டவர்களிலோ, அல்லது சிறுபான்மைச் சமூகத்திலோ தக்க ஆட்கள் கிடைக்கவில்லையெனப் போக்குக் காட்டுவது வழக்கம். அது தவறு. திருவாளர்களான ராமகிருஷ்ணா ஆசாரி-ராம்சாமி நாயுடு-அந்தோணி போன்றவர்கள் சிறுபான்மை வகுப்பினரே. இவர்கள் பழய நியமன அங்கத்தினரைக் காட்டிலும் எவ்வகையாற்றானும் தாழ்ந்தவர்களல்ல. அப்படி இருக்க இவர்கள் போன்றவர்கள் தாலூக்கா போர்டு தலைவரின் கண்கட்கும் செவிகட்கும் தோற்றாததின் காரணமென்ன? இனிச்செய்யப்போகும் நியமனங்களிலாவது தக்கவர்கள் இந்நகரில் (சிறுபான்மையோரில்) இருக்கிறார்களெனத் தெரிந்து, அவர்களிலொருவரையோ பலரையோ அல்லது அவர்கள் போன்றவர்களையோ நியமிப்பார்களா?

---

## கப்பல்.

"எரின்புரா" கப்பல் நேற்று இரங்கூனிலிருந்து சென்னை வந்து சேர்ந்திருக்கும். இம்மதி ௧௧-ம் நாள் வெள்ளியன்று இரங்கூனுக்குத் திரும்புகிறது.

"டால்ரியா" என்னும் கப்பல் இம்மதி ௩௧-ம் நாள் சென்னையிலிருந்து பினாங்குக்குப் புறப்படுகிறது.

"டாரா" கப்பல் இம்மதி ௧௯-ம் நாள் சென்னையிலிருந்து புறப்பட்டு நாகப்பட்டினம் வந்து அங்கிருந்து இம்மதி ௨௦-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை மலேயா நாட்டிற்குச் செல்கிறது. பிரயாணிகள் ஞாயிறன்று காலையிலேயே நாகப்பட்டினத்தில் கப்பலில் ஏறிவிட வேண்டுமென நாகப்பட்டினம் ஏஜண்ட் அறிவிக்கிறார்.

---

# கடிதங்கள்.

### விசேட உபச் சுங்கம்.

நேமத்தான்பட்டி மெ. மு. பழ. சத்திரத்திற்கு அருகில் சென்ற பத்து நாட்களாக ஒரு உபச் சுங்கம் ஒன்று ஏற்பட்டிருப்பதாக அறிகிறோம். ஷை உபச்சுங்கம் ஏற்படுத்தும் விடமாய் ௬-௩-௧௯௨௬ தெய்தியில் கூடின இராமநாதபுரம் ஜில்லா ஸ்தாபன சபைக் கூட்டத்தில் இவ்விடயம் கிளப்பப்பட்டதில் அங்கு சுங்கம் வைப்பது பொதுமக்களைக்கஷ்டமுறச் செய்வதாகுமென்றும் ஆதலால் அங்கு சுங்கம் வைக்கப்படாதெனவும் திருவாளர்களான எம். ஜி. முருகதாஜா சித. நா. ராம. நாராயணன்செட்டியார், முதலிய பலர் பலமாக ஆட்சேபித்ததின் பயனாக அவ்விடயம் தேவகோட்டை தாலூக்கா ஸ்தாபன சபையின் ஆலோசனைக்கு அனுப்புவதெனத் தீர்மானம் செய்யப்பட்டதென அறிகிறோம். இந்நிலையில் விசேட உபச்சுங்கம் வைக்க அனுமதித்தது பொது மக்களையும் அவயவிகளையும் அவமதிப்பது போலவேயாகும்.

தாலுக்கா ஸ்தாபன சபையார் உபச்சுங்கம் வேண்டாம் எனச் சிபார்சு செய்து ஜில்லாஸ்தாபன சபையாரும் அதை உறுதி செய்து விட்டால் விசேட உபச்சுங்கத்தில் வசூலித்த பணம் சுங்கக்காரனுக்கு லாபமும் பொதுமக்கட்கு நஷ்டமுமாகிறது. இவ் விஷமாய் மகஜர்களும் தயாரிக்கப்படுகிறது எனக் கேள்விப்படுகிறோம். விசேட உபச்சுங்கம் வைக்க அனுமதித்தது ஜில்லா போர்டு அல்ல எனவும் திரு மாணிக்கவாசகம் பிள்ளை உதவித் தலைவர் என்னும் ஹோதாவில் அனுமதித்தார் எனவும் அறிகிறோம்.

அவர் எதற்காக இவ்வளவு அவசரமாய் இக் காரியம் செய்தார் என்பதற்கு அடுத்த கூட்டத்தில் காரணம் காட்ட வேண்டுவது மிக முக்கியமாகும். திருவாளர். சித. நா. ராம. நாராயணன் செட்டியார் அவர்கள் இவ்விடயத்தில் மிக ஊக்கமுள்ள வராகக்காணப்படுகிறார். தேவக்கோட்டை தாலுக்கா போர்ட்டு அவயவிகளும் அங்கிருந்து ஜில்லா போர்ட்டுக்குத் தெரிவு செய்யப்பட்டிருக்கிற அவியவிகளும் இவ்விடயத்தில் ஊக்கங் காட்டித் தங்கடனாற்ற வேண்டுவது மிக இன்றியமையாததாகும்.

அண்ணாமலை.

* * *

### கண்டனூர்.

இவ்வூர் இளைஞர் சங்கத்தின் முதலாவதாண்டு விழா இத்திங்கள் ஏழாம்நாள் காலை ௮-மணிமுதல் காரைக்குடி யூனியன்போர்டு மெம்பரும் குமரன் ஆசிரியரும் சிவனடியார் திருக்கூட்டத்தைச் சார்ந்தாருமான சொ. முருகப்ப செட்டியார் தலைமையில் நடைபெறும் எனவும் அவ்வமயம் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படும் எனவும் ஓர் அன்பர் அறிவிக்கிறார்.



### லோகல் போர்டு மெம்பர் பதவி.

லோகல் போர்டு மெம்பர் பதவியை ஒரு பட்டத்துக்கொப்பாகச் சிலர் கருதுகின்றனர். என் இப்படிச் சொல்லவேண்டி வந்ததெனில் அன்னார் பொது மக்கட்கு இன்னல் விளைக்கும் கருமங்களைத் தொலைக்க முன்வராமலிருப்பதும், பொது மக்கள் நலனுக்கேற்ற பலப்பல புது பிரேரேபணைகள் கொண்டுவராமலும், நகரைச்சுற்றிப்பார்த்து அதிற் சீர்படுத்த வேண்டுவனவற்றை எல்லாம் சீர்திருத்த முயலல், முதலிய இன்னும் பல நற்காரியங்களைச் செய்யாது வாளா விருப்பின் அவர்கள் பொது ஊழியம் செய்ய மெம்பர் பதவியை விரும்புகிறார்களென எப்படிச் சொல்லமுடியும்? ஒரு பட்டத்துக் கொப்பாகவே கருதுகின்றார்களென்பதில் இம்மியும் பிசகில்லை.

காந்தியடிகள் ஒளிவீசும் இந்நாளில் எனவர்ணிக்கும் ஒரு அன்பர் காரைக்குடி யூனியன் போர்டுக்குச் சுமார் பதினைந்து மாதங்கட்கு முன் அபேட்சகராக நின்றார் வீடு வீடாய்ப்போய் என்னுடன்போட்டிபோடுபவருக்கு என்ன பரம்பரை பாத்யமா? எனக்கே ஓட்போடுங்கள் எனத் தம் வார்டிலுள்ள ஒவ்வொரு ஓட்டரிடமும் போய்க்கெஞ்சிக் கெஞ்சி ஓட் கேட்டார். அவர் பொது மக்கட்கு நலன் நாடுவர் என நம்பி வாலிபர் பலர் அவருக்காக ஓட் சேர்க்க ஆரம்பித்தனர். மிகச் சிறிய மெஜாரிட்டியினால் தேர்தலில் வெற்றியும் பெற்றார். ஸ்தல ஸ்தாபனச் சட்டப் புத்தகம் (தமிழில்) ஒன்றும் விலைக்கு வாங்கினர். வாங்கியும் பயனென்! தைரியமில்லை. அவர் மெம்பராகி இற்றைக்குப் பதினைந்து மாதங்களாகிறது. இன்றுவரை அவர் பொதுமக்கட்கு என்ன நலன் செய்திருக்கிறார். ஒன்றுமில்லை. பழய மெம்பருக்கும் இவருக்கும் இதுவரை எவ்வித வித்தியாசமும் வாக்காளர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. இவரும் யூனியன் போர்டு மெம்பர் பதவியை ஒரு பட்டமாக மதிக்கிறார்போலும் ஐயோ! பாவம். சோர்வு காலம் இனியாவது இவரும் இவர்போன்றோரும் தங்கடனறிந்து ஆற்றுவார்களா?

பிறரைப்பற்றி எனக்குக் கவலையில்லை. அடிகள் பெயரைச் சொல்லிக்கொண்டும்—அடிகள் சிஷ்யன்போல நடித்துக்கொண்டுமிருப்பவர்கள் பொது ஸ்தாபனங்களில் அங்கம் பெற்றுத் தங்கடனாற்றாமலிருந்தால் நான் அவர்களை விட்டுவைக்க முடியாது. அவர்கள் நடிப்பைப் பொதுமக்களுக்கு உணர்த்த எனக்கு உரிமையுண்டு. அவ் உரிமையைச் சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் நான் உபயோகித்துக்கொள்ளத் தீர்மானித்துவிட்டேன். ஆகலின் அன்னார் போன்றோர் இனியாவது பொதுமக்கள் நலனை நாடி உழைக்கவேண்டும் அல்லது தம் பதவியை துறத்தல் வேண்டும்.

அண்ணாமலை.

---



## பட்டங்கூடாது.

(திரு: வி. கலியாணசுந்தரன்.)

### தமிழ் நாட்டுக் காங்கரஸ் கமிட்டிக்குத் தீர்மானம்.

ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்கள்,

தலைவர், தமிழ் நாட்டுக் காங்கிரஸ்.

அன்பார்ந்த தலைவரே, வணக்கம். வரப்போகுஞ்சென்னைச் சட்டசபைத் தேர்தலுக்குக் காங்கரஸ் சுயராஜ்யக் கட்சித் தொடர்பு கொண்டு அபேட்சகராக நிற்கும் சகோதரர்களுள் சிலர் பட்டஞ் சுமப்பது பற்றியும், அரசாங்கத்தார் தயவால் நியமனம் பெற்றிருப்பது பற்றியும், கதருடையில் பற்றிலாதிருப்பது பற்றியும் தமிழ் நாட்டு அன்பர் சிலர் கடிதம் விடுத்திருக்கிறார். அதைப்பற்றிப் பொது ஜனங்கட்கு (11—6—26) "நவசக்தி" வாயிலாகப் பதிலிறுத்தேன். அப்பதிலை நோக்குமாறு தங்களை வேண்டுகிறேன்.

தங்களைப்போல மற்ற அபேட்சகர்களுமிருந்தால் ஐயப்பாட்டிற்கு இடம் ஏற்படல் அரிது. சில அபேட்சகர்கள் பட்டதாரிகளாகவும், அரசாங்கத்தார் தயவால் நியமனம் பெற்றவர்களாகவும் கதரில் பற்றில்லாதவர்களாகவும் இருத்தல் உண்மை. இவர்கள் நாளை பதவி ஏற்கமாட்டார்கள் என்பதற்கு என்ன உறுதி? இவர்கள் பட்ட முதலியவற்றைத் துறந்து, கதருடையில் பற்றுக் காட்டினாலன்றி என்போன்றார்க்கு நம்பிக்கை ஏற்படாது.

இப்பொழுது நாம் வழ வழவென்று இருப்போமாயின் பின்னே வருந்த நேரும். இப்பொழுதே எச்சரிக்கையாயிருத்தல் வேண்டும். கட்டுப்பாடுகளைத் தளர விட விட நமது கட்சியின் ஆக்கங் குன்றுவது திண்ணம். காங்கிரஸில் ஒத்துழைப்பு நுழையாதவாறு காத்தல் வேண்டுமென்னுங் குறியோடு தங்களுடன் சேர்ந்து உழைக்கின்றேனேயன்றி வேறு எக்குறியோடும் உழைக்கின்றேனில்லை என்பது தங்கட்குத் தெரியும். பட்டத்தை இழித்து இழித்துக் கூறிப் பட்டதாரிகளை ஆதரிப்பது அறமாகத் தோன்றவில்லை. கூர்த்தமதியுடைய தங்கட்கு நிலையை இன்னும் விரித்தோதவேண்டுவதில்லை.

தமிழ் நாட்டுக் காங்கரஸ் காரிய நிர்வாகக் கூட்டத்திலாதல், பொதுக்கூட்டத்திலாதல் கீழ்வருந் தீர்மானங் கொணர உறுதி கொண்டிருக்கிறேன். அதற்குத் தாங்கள் துணைபுரிவீரென நம்புகிறேன். அத்தீர்மானத்தை வரப்போகுந் தமிழ்நாட்டுக் காங்கரஸ் காரிய அல்லது பொதுக்கூட்டத்தில் ஊக்கு மாறு வேண்டுகிறேன்.

### தீர்மானம்.

கான்பூர் காங்கரஸ் தீர்மானத்துக் கிணங்கிச் சென்னைச் சட்டசபை அபேட்சகராக நிற்பவருள் எவரேனும் பட்டதாரியாகவும், அரசாங்கத்தார் தயவால் எவ்வமைப்பிலாதல் நியமனம் பெற்றவராயும், கதருடையில் பற்றில்லாதவராயு மிருப்பரேல் அன்னார் முறையே பட்டத்தையும், நியமனத்தையும் துறக்குமாறும், கதருடையில் பற்றுக் கொள்ளுமாறும் இக்கூட்டந் தீர்மானிக்கிறது.

---



## வெளி நாடு.

பாரஸீக நாட்டில் புதிய மந்திரிக்கூட்டம் ஏற்பட்டுவிட்டது.

* * *

ஸர்வதேச சங்கத்திலிருந்து தென் அமெரிக்கா, ப்ரஸீல் நாடு விலகிக்கொண்டது.

* * *

மாஜி சென்னைக் கவர்னர் வில்லிங்டன் பிரபு கனடா நாட்டின் கவர்னர் ஜனலராக நியமனம் பெற்றிருக்கிறார்.

* * *

'சிட்டி ஆப் கோபின்ஸ்' என்ற கப்பல் புயற்காற்றினால் பவளக்குன்றில் மோதிக் கொண்டதாம்.

* * *

தங்களுக்குள் நேர்ந்த மனஸ்தாபத்திற்காக பழைய வழக்கத்தை முன்னிட்டு போலண்டு நாட்டு மந்திரியார்களிலிருவர் ஒருவரையொருவர் சுட்டுக்கொண்டனராம்.

* * *

ஸ்விட்ஜர்லந்து தேசத்தில் சுழற்காற்றின் கொடுமையால் காடுகள் தீப்பற்றி எரிந்து போயின. பண்ணைக்கட்டடங்கள் அழிந்து போயின. உயிர்ச்சேதமும் அதிகம்.

* * *

ஆங்கில நாட்டில் லிபரல் கட்சியாருக்குள் இருந்த பிளவுகள் ஒழிந்து ஆக்ஸ்போர்டு பிரபு அவர்களின் தலைமையின்கீழ் மேற்கூறிய கட்சியார் உழைப்பதாக தீர்மானம் செய்துள்ளார்கள்.

* * *

மாஜி துருக்கி சுல்தான் அவர்களுடைய பிரேதத்தை கடன்காரர்கள் வழியில் மறித்துக் கொள்வாரென பயந்து அதை வெளியில் கொண்டுவர அதிகாரிகளும் பந்துக்களும் அஞ்சுகின்றார்களாம்.

* * *

ஆங்கில நிலக்கரி சுரங்க தொழிலாளர் முதலாளி தகராறு இன்னும் நேரே தீர்ந்தபாடில்லை. முதன் மந்திரியின் யோசனையை முதலாளிகள் ஏற்றுக்கொள்ள இசையவில்லையாம்.

* * *

பிரஞ்சு மந்திரி சபையார் தங்கள் பதவிகளை ராஜீனாமாச் செய்துவிட்டதால் பிரஞ்சு குடியரசுத்தலைவர் டூமர்க் அவர்கள் தங்கள் ஆங்கில பிரயாணத்தை ஒத்திப் போட்டுவிட்டார்.

* * *

உடன்படிக்கை மூலமாய் மொராக்கோவிலுள்ள ரிப் ஜாதியார்களை நாகரிகப்படுத்தி மேற்பார்வை பார்க்க பிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் பாத்யம் கிடைத்திருக்கிறதென்று பிரான்சு முதல் மந்திரி ப்ரியான் அவர்கள் கூறுகின்றார்.

* * *

கெனியா நாட்டில் கறுப்பு மனிதர்கள் வெள்ளை ஸ்திரிகளுடன் அவர்களுடைய சம்மதம் பெற்று கூடினாலும் அவர்களுக்கு தூக்குத் தண்டனை விதிக்கப்படும் என புதிய சட்டமொன்று ஏற்படப்போகின்றதாம்.

* * *

உலக பிரமஞான சபையார் ஸ்ரீமதி பெஸண்டம்மையாரின் கோரிக்கைக் கிணங்கி, ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி அவர்களை உலக குருவாக தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். ஏசுநாதரின் ஆவி கிருஷ்ணமூர்த்தியின் உடலில் பரிணமித்துக் கொண்டிருக்கிறதாம்.

* * *

டாக்டர் ரவீந்திரநாத் டாகூர் அவர்கள் இதாலிய மன்னனை பேட்டிகண்டாராம். தவிர இத்தாலிய முதன் மந்திரி முஸ்ஸோலினி அவர்களை இரண்டாவது தடவைச் சந்தித்து நீண்டநேரம் பேசிக்கொண்டிருந்தாராம். ரோமாபுரி சர்வகலாசாலையார் கவி ரவீந்திரரை மிக்க குதூகலத்துடன் வரவேற்றார்களாம்.

* * *

அடுத்தவாரம் பார்லிமெண்ட் மகாசபையில் நிலக்கரிச் சுரங்கத்தில் தொழிலாளர்கள் எட்டு மணி நேரம் வேலைசெய்யவேண்டுமெனவும் அவைகளைப் பற்றிய விபரங்களடங்கிய மசோதா ஒன்று மந்திரி சபையாரால் கொண்டுவரப்படும் எனவும் அதை தொழிற்கட்சியார் பார்லிமெண்ட் சபையில் தளராமல் அடிக்கொருதரம் எதிர்த்து போராடப்போவதாகவும் கூறப்படுகின்றது.

---

## தாய் நாடு.

தேசபந்து நாள் ஜூலைமீ ௧௨ இந்தியா முழுவதும் கொண்டாடப்பெறும்.

* * *

பரோடா மகாராஜா பிரான்சு நாட்டில் கீல்வாயுசம்பந்தமான நோயால் வருந்திக் கொண்டிருக்கிறார்.

* * *

"பார்வர்டு" பத்திரிகைக்கு ஸ்ரீமான் எஸ் ஆர். பக்ஷி என்பவர் புதிய ஆசிரியராக நியமனம் பெற்றிருக்கிறார்.

* * *

ஸர். ஜான்சால்மெண்ட் அவர்கள் இந்தியாவின் ஆகாயப்படை மந்திரியாக நியமனம் பெற்றிருக்கிறார்.

* * *

வங்காள காங்கிரஸ் கமிட்டியில் ஏற்பட்டிருந்த தகராறுகள் தீர்ந்து மீண்டும் ஸென் குப்தா அவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

* * *

காலஞ்சென்ற கோகலே அவர்களால் காணப்பெற்ற "இந்திய ஊழியச்" சங்கத்திற்கு கனம் சீனிவாசசாஸ்திரி மீண்டும் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

* * *

வங்காள நாட்டிலுள்ள பாரிஸால் நகரில் கூடப்போகும் நாமசூத்ர (ஆதித்திராவிடர்கள்) மகாநாட்டில் பண்டித மதன் மோகன மாளவியா தலைமை வகிப்பார்.

* * *

சென்னைக் கவர்னரும், விஸ்லிகோஷன் அவர்களும் ஜோட்பூர் மகாராஜாவால் அரண்மனையில் ஏற்பாடு செய்யப்பெற்ற ஒரு நடனத்திற்கு பிரசன்னமாயிருந்தார்கள்.

* * *

ராவல்பிண்டி நகரத்தில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே கலவரம் நேர்ந்து எட்டு முஸ்லீம்களும் ௬ இந்துக்களும் கொல்லப்பட்டதாயும் ௧௪ முஸ்லீம்கள் காயமடைந்ததாயும் செய்தி கூறுகின்றது.

* * *

பக்ரீத் பண்டிகைக் காலத்தில் ஸ்ரீமதி ஸரோஜினி நாயுடு, ஸென்குப்தா அவர்கள் உள்ளிட்ட பல தலைவர்கள் வங்காளத்தில் சுற்றுப்பிரயாணம் செய்வார்கள் என கூறப்படுகிறது.

* * *

கான்பூர் காங்கிரஸ் சமயத்தில் யோசனை எழுந்த இந்திய தேசியக் கைதிகள் மகாநாடு லாகூர் நகரில் ஜூன்மீ ௨௬-௨௭ யன்று கூடும். அந்த சமயத்தில் மகாநாட்டைப் பற்றிய விபரங்கள் வாதிக்கப்படும்.

* * *

"தினவர்த்தமானம்" என்ற கான்பூர் பத்திரிகையின் ஆசிரியர் சிமான் ராமசங்கர அவஸ்தி என்பவர் இ. பி. கோ. ௧௨௪ ஏ. என்ற பிரிவின் கீழ் குற்றஞ்சாட்டப் பட்டிருக்கிறார்.

* * *

மசூதிகளுக்கு முன் வாத்யம் வாசிக்கும் வழக்கமும் உரிமையும் இருந்தனவா என்று பரத்வான் மகாராஜாவிற்கும் மாஜி வங்காள மந்திரி காஸ்னவி அவர்களுக்கும் பத்திரிகையில் வாதம் நடந்துகொண்டிருக்கிறது.

* * *

வங்காள புதிய அவசரச் சட்டத்தின் கீழ் கயா வாசியான கோஷ் என்பவர் கல்கத்தா போலீஸ் கமிஷனர் அவர்களின் உத்திரவை மீறியதாக குற்றஞ்சாட்டப்பெற்று மூன்று மாதம் சிறைத்தண்டனையடைந்தார்.

* * *

கோலாப்பூர் சமஸ்தானத்தில் ௧௦ வயதுக்குள் பெண்ணையும் ௧௪-வயதுக்குள் ஆணையும் கலியாணம் செய்தால் அது குற்றமாக பாவிக்கப்படும் என்றும் ௨௦௦ ரூபா அபராதம் விதிக்கப்படும் என்றும் புதிய சட்டம் ஏற்பட்டிருக்கிறது.

* * *

ஹிந்து கலியாண ஊர்வலங்களில்கூட சில தெருக்களில் தில்லிநகரத்தில் மசூதிகளுக்கு முன்பாக வாத்தியம் வாசிக்கக்கூடாதென்று டிப்டி கமிஷனர் அவர்கள் உத்திரவிட்டிருக்கின்றாராம். தவிர ஊர்வலத்தோடு இரண்டுகௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகள் கூடச் செல்லவேண்டுமாம்.

---

## தமிழ் நாடு.

சென்னை சட்ட சபை ஜூலைமீ ௬௦ யன்று கூடும்.

* * *

பாபநாசம் தாலுக்கா போர்ட்டுத் தேர்தல் போர்ட்டின் தலைவர் அவர்களால் ஒத்தி வைக்கப் பெற்றிருக்கிறது.

* * *

தென்னிந்தியா ரயில்வேத் தொழிலாளர் சங்கத்தின் வருஷாந்திரக் கொண்டாட்டம் ஜூன் ௨௬, 20உ களில் நாகப்பட்டிணத்தில் கூடும்.

* * *

சென்னை பின்னி கம்பெனியாரைச் சேர்ந்த தெய்வசிகாமணி முதலியாரவர்கள் வெயிலின் கொடுமை தாங்கமுடியாமல் மாரடைத்து ஆபிஸிலே இறந்து போனார்.

* * *

சென்னை மாகாணத்திற்கும் தனிப்பட்ட சட்ட சபை முஸ்லீம் கட்சியொன்று வேண்டுமென சர். அப்துல்ரஹீம் அவர்கள் யோசனை கூறுகின்றார்.

* * *

தேசபந்து சித்தரஞ்சனதாஸர் திருநாள் சென்ற ஜூன்மீ ௧௬உ சென்னையில் கொண்டாடப்பெற்றது. அதுகாலை தமிழ் நாட்டுத் தலைவர் பலர் சொற்பெருக்கிட்டார்கள்.

* * *

யாகுப்ஹாஸன்சேட் அவர்கள் சட்டசபைக்கு அபேட்சகராக நிற்பதை சென்னை யரசாங்கத்தார் தடை செய்வதால் அதைக் கண்டித்து சென்னையிலும் வேறு இடங்களிலும் கூட்டங்கள் நடைபெற்றன.

* * *

சிதம்பரத்துக்கருகாமையிலுள்ள ஜெயம் கொண்டான் என்ற கிராமத்தில் சிமான்கள்: எம். வி; ராஜா முதலியவர்கள் ஆதித்திராவிடர்களின் குறைகளைப்பற்றி பிரசங்கம் செய்தார்கள்.

* * *

சென்னை மாகாண தபாற்காரர்கள் மகாநாடு கோயமுத்தூர் நகரில் ஜூன்மீ ௨௦உ களில் சிமான். வி. வி. வேங்கடரமணய்யங்காரவர்கள் தலைமையின் கீழ் கூடும் என அறிவிக்கப்படுகிறது.

* * *

தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியில் நேர்ந்திருப்பதாக தாம் நினைக்கும் சில ஒழுங்கீனங்களின் பொருட்டு தமது நிர்வாகப் பதவியை ராஜினாமாச் செய்துவிட்டதாக டாக்டர் வரதராஜலு நாயுடு அறிவிக்கிறார்.

* * *

திருச்சினாப்பள்ளி மார்க்கெட்டின் கீழ்புரம் ஜூன்மீ ௧௩உ காலை தீப்பிடித்து சுமார் ௨௦௦ கடைகள் எரிந்துபோயின. திருச்சியில் வேறொரு பாகத்தில் தீப்பிடித்து நூறு குடிசைகள் தீக்குரையாயின.

* * *

சென்ற ஜூன்மீ ௧௩உ திருவான்மியூரில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீமான்கள் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், உலகநாத நாயகர், சி. என். முத்துரங்க முதலியார் முதலியோர்கள் தேர்தலைப்பற்றி பேசினார்கள்.

* * *

அம்பாசமுத்திரம் தாலூகா காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் அம்பாசமுத்திரத்தில் ஸ்ரீமான் கே. வி. அனந்தநாராயணய்யர் அவர்கள் தலைமையின் கீழ் ஸ்ரீமான் எஸ். சத்திய மூர்த்தி அய்யர் அவர்கள் வருக்தேர்தல்களைப்பற்றி ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

* * *

உதகமண்டலத்தில் ஜூன்மீ ௧௩உ கூடிய கூட்டத்தில் பூர்ண மதுவிலக்கு இந்தியாவில் சாத்யமான சங்கதியென்றும் பூர்ண மதுவிலக்கு ஏற்பட்டதன் பின்னர் அமெரிக்காவின் வருஷ வருமானம் ௯௦௦ கோடி டாலர் அதிக மேற்பட்டதென்றும் மதுவருந்துவதை எந்த மதமும் ஏற்றுக்கொள்ளவில்லையென்றும் பூர்ண மதுவிலக்கினால் அரசாங்கத்தாருக்கு வருமானம் குறையாதென்றும் பூர்ண மதுவிலக்கினால் போலீஸ், ஜெயில், இலாக்காக்களில் அரசாங்கத்தாருக்கு செலவு குறையுமென்றும் டாக்டர் பெகுஸன் அவர்கள் எடுத்துக்காட்டினார்.

---

## தனவணிகர் நாடு.

### தேவகோட்டை.

(நமது நிருபரிடமிருந்து)

தாலூக்கா போர்டு:—தேவகோட்டை தாலூக்கா போர்டின் தலைவராக கானாடுகாத்தான் ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார் நியமிக்கப்பட்டிருக்கிறார். அன்னார் பகீரதப் பிரயத்தனஞ் செய்து இப்பதவி பெற்றார் எனச் சொல்லப்படுகிறது.

கோ. கி:—இந்நகரிலுள்ள கோ. கி. என்னும் ஒருவர் கல்யாண வீடுகள் தோறும் சென்று "ஊழியன்" பத்திரிகையை வாங்காதீர்கள் எனப் பிதற்றித்திரிகின்றாராம். இவர் பிதற்றுவதாகச் செய்தி எட்டிய பிறகு ஊழியன் பத்திரிகைக்குப் பலர் புதுச் சந்தாதாரர்களாகப் பதிவு செய்துகொள்ளும்படி கடிதம் எழுதியுள்ளார்கள். அதிற் சிலர் இவர் பிதற்றியதைக் கேட்ட பிறகும் தம் மனச்சாக்ஷிப்படி நடந்துகொண்டார்கள். பல பழைய சந்தாதாரர்கள். கோ. கி. இனியாவது தம் உளத்தை வாயைத் திறந்து உளறித் திரியாது ஏதும்வேறு நல்லவேலையிருந்தால் பார்க்கலாம் அல்லது உண்பது செறிக்க தினம் நான்கு மைல் தூரம் காலால் நடந்து பொழுதைப் போக்கலாம்.

தி. ராம. சாமிவீடு:—இந்நகரிலுள்ள தி. ராம. கையரு சாமிவீட்டில் இம்மதி ௭-ம் நாள் முதல் ௧-ம் நாள் வரை பழனியாண்டவர் பூஜை நடைபெறும் எனவும் அத்தினங்களில் பல்லாயிரக்கணக்கானவர்கட்கு அன்னமளிக்கப்படுமெனவும் அறிவிக்கிறோம்.

கௌரவ மாஜிஸ்ட்ரேட்:—திருவாளர். தி. அ. சு. அ. இராமநாதச் செட்டியாரவர்கள் மறுபடியும் பெஞ்சுக்கோர்ட்டின் கௌரவ மாஜிஸ்ட்ரேட்டாக நியமிக்கப் பெற்றுள்ளார். இவர் போன்ற உலக அறிவு உள்ளவர்களாகவே பெஞ்சுக் கோர்ட்டு கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகளெல்லோருமிருந்தால் கோர்ட்டு மிக ருசிகரமாயிருக்குமென்பதில் இம்மியும் ஐயமின்று.

* * *

### வேந்தன்பட்டி திருவள்ளுவர் வாசகசாலை

சம்பாவனை:— ஸ்ரீமாந். பெரி. ஆ. ஆண்டியப்ப செட்டியாரவர்கள், தமது பௌத்திரன். திரு. பெரி. ஆண்டியப்பனுக்கு வைகாசிமீ ௩௨ காப்புக்கட்டுப்புதுமையில் நடைபெற்ற ௫ இ-ம் ஸ்ரீமாந். குப. க. பழனியப்ப செட்டியாரவர்கள். தமது குமாரர், திரு. குப்பன் செட்டியாருக்கு, வைகாசி மீ ௧௩௨ நடைபெற்ற கல்யாணத்தில் ௫ இ-ம் ஸ்ரீமாந். நா. கரு. கருத்தான் செட்டியாரவர்கள் தமது குமாரர், திரு. முத்தக்கருப்பன் செட்டியாருக்கு வைகாசி மீ ௧௩௨ நடைபெற்ற கல்யாணத்தில் ௫ இ-ம் ஸ்ரீமாந். சுப. மு. முத்தய்யா செட்டியாரவர்கள். குமாரர் திரு. சுப்பிரமணியன் செட்டியாருக்கும், ஸ்ரீமாந். மெ. பழ. நாகப்ப செட்டியாரவர்கள் குமாரத்தி, திரு. நாகம்மைக்கும் வைகாசி மீ ௧௩௨ நடைபெற்ற கல்யாணத்தில் மாப்பிள்ளை வீட்டார் ௫ இ-ம் பெண் வீட்டார் ௫ இ-ம் வாசகசாலைக்கு, சம்பாவனை செய்தனர். இவர்கட்கு வாசகசாலையாரின் நன்றி உரியதாக.

உபந்நியாசம்:— ஆனி மீ ௧௨ மாலை ௫—௩௦ மணிக்கு ஸ்ரீமாந் அ. நாக. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் தலைமையில் ௩-ம் ஆண்டு, ௩-வது கூட்டம் கூடியது. கடவுள் வாழ்த்துப் பாடியபின் திருவாளர்களான. குப. சின்னைய்யா (மாணக்கன்) "புகையிலைப்பிரபுவின் சரித்திரம்." என்பதையும், ராம. வீர. காசிச்செட்டியார் "பொய்" என்பதையும். கா. பழ. நாகப்ப செட்டியார், "ஊக்கமது கைவிடேல்" என்பதையும், குப. அரு. நடராஜன் செட்டியார் "நற்பழக்கம்" என்பதையும் நா. சோமசுந்தரஞ் செட்டியார், "செய்ந்நன்றியறிதல்" என்பதையும், உபந்நியாசித்தபின், தலைவர் முடிவுரையுடன் நன்றி கூறப்பெற்று ௭—௨0 மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது என காரியதரிசி அறிவிக்கிறார்.

## கொழும்பு
## இந்திய வாலிபர் சங்கம்.

இச்சங்கச் சிறப்புக்கூட்டம் இன்று மாலை 4-30 மணிக்குப் புதுக் கதிரேசன்கோவில் மேன் மாடியில் திருவாளர் (கெளரவ) கோ. நடேசய்யரவர்கள் தலைமையிற் கூடிற்று. தேவக்கோட்டைத் திருவாளர் அ. வெ தியாகராசச்செட்டியாரவர்கள் "இந்தியாவின் தற்கால நிலை" என்னும் பொருள் பற்றித் தங்களுடைய மேனாடு சென்று ஈட்டிய அறிவும் தாய் நாட்டுப் பற்றுஞ் சேர்ந்து யாவரும் எளிதிலுணருமாறு இனியதோர் விரிவுரை நிகழ்த்தினர்கள்: அதன் சுருக்கம்:—

க. பெண்கல்வியது இன்றியமையாமை.

உ. பெண்கள் பிறவூர் சென்று கண்டு பொது அறிவு ஈட்டல்.

௩. தாய்மார் பிள்ளைகட்கு அஞ்சாமை யூட்டல்.

ச. குழந்தை மணத்தைத் தடுத்தல் (பாலிய விவாகம்).

ரு. கைம்மை மணத்தை ஏற்றல் (விதவாவிவாகம்).

சு. தீண்டாமை யொழித்தல்.

எ. உடல் வலுவுக்காக விளையாட்டு முதலியன பழகல்.

அ. புதினத் தாள்படித்தல்.

௯. கதர் உடுத்தல்.

முதலிய அருங்குறிப்புகளை அடிப்படையாகக்கொண்டு பேசினர்கள். பெண்கள் படித்தாலன்றி நாடு முன்னேறுதல் முடியாது. பெண்கள் படித்தால் மாத்திரம் போதாது; பல ஊர்களுக்குஞ் சென்று ஆங்காங்குள்ள தாய்மார்கள் நிலைமையும் அவர்கள் பிள்ளைகள் வளர்க்குமுறையும் நேரிற் கண்டாலன்றி நமக்குப்பின் நம் நாட்டு முன்னேற்றத்திற்குப் பாடுபடும்படி தகுதியுள்ளவர்களாகிய நம் பிள்ளைகளைச் செம்மையாக வளர்க்கமுடியாது. அதனால் பெண்கள் கட்டாயம் பிறவூர் சென்று பார்த்தல் வேண்டும். பிள்ளைகள் வீரமுடையவர்களாவதற்கும் அச்சமுள்ளவர்களாவதற்கும், பாலுடன் வீரத்தையோ அச்சத்தையோசேர்த்து ஊட்டிவளர்க்கும் தாய்மார்களே ஏதுவாகின்றார்கள். மிக வீரம்வாய்ந்த மன்னர் மன்னனாகிய சிவாஜி, அத்துணைச் சிறப்புவாய்ந்தமைக்கு ஏது அப்பெரியாரை வளர்த்த தாய் சொல்லிவைத்துள்ள இராமாயணம் பாரத கதையின் அறவுரைகளே என்பது அப்பெரியார் கூறிய அமுதமொழிகளால் விளங்கக்கிடக்கின்றது. குழந்தை மணம் நமது நாட்டைத் தவிர வேறெந்த நாட்டிலுங் கிடையாது. குழந்தை மணத்தால் கைம்மை (விதவை) மிகுதிப்படுவதுடன் உடல்வலி குன்றிய பிள்ளைகளும் நீண்ட நாட்களுக்கு வாழமுடியாத பிள்ளைகளுந் தோன்றி நமது நாட்டுக்கு பயன் பெறாது போகின்றார்கள். குழந்தைச்சாவும் (சிசுமரணமும்) மிகுதிப்படுகின்றது. பிற நாட்டில் நூற்றுக்கு மூன்று குழந்தை சாவென்றால் நம் நாட்டில் நூற்றக்கு மூன்றுதான் உயிர் வாழ்கின்றது. பிறநாட்டில் சராசரி வயது ஆண்டு ௫௯ நிங்கள் ௬. நம் நாட்டிலோ ஆண்டு உ௩ திங்கள் உ. இவ் வாறு இருந்தால் நாம் முன்னேறுவதெப்படி?

கைம்பெண் (விதவை) களோ நம் நாட்டில் மிக மலிந்துவிட்டார்கள். ஒரு ஆண்டுக்குட்பட்டவர்கள், இரண்டு, மூன்று, ஐந்து, பத்து, பதினைந்து, முப்பது ஆண்டு கட்குட்பட்டவர்கள் பல்லாயிரக் கணக்காயிருக்கின்றார்கள். பெண்களது அறியாப் பருவத்துத் தெருவில் விளையாடுங் காலங்களில் ஈன்றோர் மணம் முடிப்பித்து வைத்துவிட்டு கொண்டவனிறந்துவிட்டால் அப்பெண்ணின் ஊழ் என்று அஞ்சாது கூறுகின்றார்கள். இப்படிப்பட்ட மணத்தை ஏன் நீக்கக்கூடாதென்றால், வழக்கம் வழக்கம் என்று மறுமணஞ் செய்துகொள்ளுந் தன்மையாகாது என பெண்களும் முழக்கம் செய்கின்றார்கள். இக்கொடுமையாலும் ஆடவர் மறு மணஞ் செய்துகொள்ளுந்தன்மையாலும் பெண்களும் மறுமணம் செய்துகொள்ளல்வேண்டும். அது பொருத்தமாகும். தீண்டாமை நம் நாட்டில் இருக்கும்வரை நாம் முன்னேறவேமுடியாது. கடவுள் படைத்த படைப்பில் தீண்டப்படாதென்று ஒருயிர் இருப்பதாகவில்லை. இது கொடுமை, கொடுமை. உடல் வலுவுக்காக விளையாட்டு முதலியன, இன்றியமையாததே. பிற நாட்டில் விளையாட்டைப் புகழ்கின்றார்கள். நம் நாட்டில் அதை இகழ்கின்றார்கள். முற்காலங்களில் சிலம்பம் முதலிய அரும் விளையாட்டுகள் இருந்திருந்தன. இப்போதும் சில விடங்களில் இருக்கின்றன. இது போன்றது இன்னும் செலவின்றி நாம் விளையாடுவதற்கேற்றதுமான சில விளையாட்டுகளைத் தெரிந்தெடுத்து விளையாடுதல் வேண்டும். மக்கள் எல்லோரும் புதினத்தாள் (பத்திரிகை) படித்தல் வேண்டும். பிறநாட்டில் எல்லோரும புதினத்தாள்படிக்கின்றார்கள். அவ் வந்நாட்டில் பல்லாயிரக் கணக்கான புதினத்தாள்கள் தோன்றி யிருக்கின்றன. படிப்பவர்கள் தொகையும் அப்படியே பெருகியிருக்கின்றன. அதுபோலவே நம் நாட்டிலும் பெருகவேண்டும். இக்காலத்துப் பத்திரிகைகள் என்று சொல்லப்பெறும் புதினத்தாள்களே சிறந்த வழிகாட்டிகளாகின்றன.

மேலும் ஒரு நூலாசிரியன் தன் ஒரே கருத்தைத் தன் நூலில் எழுதியிருக்கின்றான். புதினத்தாள்களிலோ பலவாசிரியர் பல கருத்துக்களை அவ்வப்பொழுது வெளியிடுகின்றார்கள். அதனால் பண்டை நூன் முறையை விட இக்காலத்துப் புதினத்தாள்களே சிறப்புடையன. கதர் உடுத்தல் நாம் முன்னேறுவதற்கும் நம்நாட்டு ஏழைகள் பாதி வயிறேனும் பட்டினியின்றி உண்பதற்கும் சார்பாகின்றது. நம் அனைவரையும் ஒரு நாட்டவர் என்னும் உணர்ச்சியை உண்டுபண்ணுகின்றது. நாளடைவில் நமதுரிமையையும் வாங்கித்தரவல்லதாகின்றது. அதனால் இன்றியமையாது, நாம் அனைவரும் கதர் கட்டவேண்டும்.

பின்பு முத்திநாதசாமி என்னும் பெரியார் மகாத்மா காந்தியடிகள் உலகத்துக்குப் பொதுவாகவும் நம் இந்தியாவுக்குச் சிறப்பாகவும் ஓர் தீர்க்க தரிசி யென்னும் உண்மைவழி ஒழுகப் போதிப்பவரென்றும் கதரே இம்மை, மறுமை, வீடு ஆகிய மூன்றிற்கும் காரணமென்றும் பிறநாட்டு மொழிகளைக்காட்டிலும் நம் நாட்டு மொழியே அதிலும் தமிழே சிறந்ததென்றும் கூறினர்கள்.

அவைத் தலைவரவர்கள் மலாய் முதலிய நாட்டில் நம் சகோதரர் (உடற்பிறப்பாளர்) படுந்துன்பத்தைவிட இங்கு (இலங்கை) மிகுந்த துன்பப்படுகிறார்களென்றும் இங்கு பத்தடி அகலமுப் பதினொரு அடி நீளமும் உள்ள அறையில் இரண்டு ஆணும் தொடர்பு இல்லதும் உள்ளதுமாகிப மூன்றுக்கு மேற்பட்ட பெண்ணும் தங்க நேரிடுகின்றதென்றும் அதனாலேயே இருவரும் கற்புக்கெட்டு நோயுறுகின்றார்களென்றும் இக்கொடுமையை நீக்க நாமெல்லாம் முயலவேண்டுவென்றும் கூறினர்கள். நமக்கு அஞ்சாமை வேண்டும் என்றும் கூறினர்கள். பின்பு அமைச்சரால் வாழ்த்தும் வணக்கமும் கூறப்பெற்று அவை அகமகிழ்வோடு கலைந்தது.

ஊழியன்.



## நோட்டீஸ்.

இராமநாதபுரம் ஜில்லா காரைக்குடியிலிருக்கும் வெ. ரும. வெங்கிடாசலம் செட்டியார் ஷை யூரிலிருக்கும் க. மு. க. கலுங்கப்ப செட்டியாருக்கு விடுத்த நோட்டீஸ்.

ஷை கலுங்கப்ப செட்டியார் எனக்குத் தரவேண்டிய வட்டியும் முதலோடும்கூடிய தொகையைக் கொடுக்காமல் வீண் சால்ஜாப் சொல்லிக்கொண்டிருப்பதால் ஷையாருக்கு இதன்மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதுகண்ட ஒரு வாரத்திற்குள் கொடுக்கத்தவறினால் மேல் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

வெ. ரும. வெங்கிடாசலம்
செட்டியார்.

ராய. சொக்கலிங்கனல் காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

ண்திரிகளுக்குள்ள சகல கஷ்டங்களையும் நிவர்த்திப்பது எது?

கேஸரியின்

## “லோத்ரா”

ஆனால் அவர்கள் என்ன சொல்லுகிறார்கள்?

ஸ்ரீமதி மிஸர்ஸ் கர்த்தா எழுதுகிறார். “நான் ௧௦-வருஷ காலமாய் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ருது சூலை வயிற்றுவலி கேஸரியின் லோத்ராவை உபயோகித்த பிறகு அத்யாச்சர்யமாய் நிவர்த்தியாயிற்று.”

ஸ்ரீமதி மிஸ். கோபால பணிக்கர் எழுதுவதாவது. “லோத்ராவின் உபயோகத்தால் நானும் என் சகோதரியும் ருது சூலை கஷ்டத்தினின்று நிவர்த்திக்கப் பட்டோம்.”

இது எங்கு கிடைக்கும்? எல்லா மருந்து ஷாப்புகளிலும்,

**கேசரிகுடீரம்,**
ஆயுர்வேத ஔஷதசாலை,
எழும்பூர், மதராஸ்.
என்னுமிடத்திலும் கிடைக்கும்.

---

அதிக பொருள் செலவின்றி, உபாத்தியாயர் உதவியுமின்றி, தானாகவே அதிக பிரயாசையின்றி ஆங்கிலம் கற்றுக்கொள்ளக்கூடிய அரிய புத்தகம்.

இங்கிலீஷ் படிக்க ஆவலுடன் இருக்கும் அன்பர்களே! ஏன் கவலைப் படுகிறீர்கள்.

உங்களுக்குச் சுலபமாகவும், விரைவிலும் சுயமாகவும், பிறர்உதவிஇல்லாமலும், நன்றாகஆங்கிலம் கற்பிக்கக்கூடியது.

**20,000** ஜனங்களுக்கு ஆங்கிலம் விரைவில் நன்றாகக் கற்றுக் கொடுத்தது இப்புத்தகம்ஒன்றே.

இது மிகவும் அருமையானது என்று பல மேதாவிகளால் நன்கு மதிக்கப்பட்டது.
அநேக சர்ட்டிபிகேட்டுகள் வந்துகொண்டிருக்கின்றன. உலகமெங்கும் புகழ் பெற்றது.

700 பக்கங் கொண்ட முழு காலிகோ பயிண்ட் புத்தகம் 1க்கு ரூபாய் 2 தான்.
முதல் முதல் இம்மாதிரி வெளிவந்த புஸ்தகம் இதுதான் கவனிக்கவும்.

# ஆங்கில ஆசான்
(அல்லது)
# ஆங்கில போதினி.
(7-ஆம் பதிப்பு)

எமது ரிஜிஸ்ட்டர் லேடி டிரேட் மார்க் போட்டிருக்கும் புஸ்தகம் பார்த்து வாங்குங்கள்.

மோசம் போகவேண்டாம்!

ENGLISH TUTOR ஆங்கில ஆசான்

60 நாளில் ஸுலபமாய் இங்கிலீஷ் கற்றுக்கொள்ளலாம்

இப் புத்தகத்தில் காட்டி யுள்ளதுபோல் சில விஷயம் காட்டியிருக்கிறோம் கவனியுங்கள்.

ஏ A, பீ B, ஸீ C, டீ D, இ E.

இம்மாதிரியே கையெழுத்து மாதிரியும் காட்டியிருக்கிறது.

ஏ a, பீ b, ஸீ c, டீ d, இ e.

ஸீ எச் ஏ ஐ ஆர்—சேர், Chair—நாற்காலி
ஜீ ஏ ஆர் டி இ என்—கார்டன், Garden—தோட்டம்
யு மே ஸ்டார்ட் You may start நீ புறப்படலாம்
ஓபன் தி டோர் Open the door கதவை திற

இப் புத்தகத்தில் முழுமையும் தமிழினாலேயே இங்கிலீஷ் எழுத்திற்கு பதங்களுடன் தெளிவாகக் கற்றுக்கொள்ளும் படிக் காட்டியுள்ளது.

நமது “ஆங்கில ஆசான்” மாதர்களுக்கும், வியாபாரிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் தமிழ் உபாத்தியாயர்களுக்கும், கிராம முன்சிபு கர்ணங்களுக்கும், போலீஸ் கான்ஸ்டேபிள்களுக்கும், இலங்கை முதலிய தேயிலை காபி தோட்டங்களிலிருக்கும் கங்காணிமார்களுக்கும் மிகவும் முக்கியமானது. எல்லா புத்தக வியாபாரிகளிடமும் கிடைக்கும். கவனித்து வாங்கவும்.

23000 காப்பிகள் இதுவரையில் செலவழிந்திருப்பதே இப்புத்தகத்தின் பெருமைகளையும், இன்றியமையா உபயோகத்தையும் விளக்கிக்காட்டும்.

தி. இராஜகோபால் முதலியார், “ஆனந்த குண போதினி” புக் டிபோ,
302, தங்கசாலைத் தெரு, மதராஸ்.

1000 தலைவாங்கிய அதிசய சிந்தாமணி மூன்று ஆப்டோன் படத்துடன் விலை ரூபாய் 1.

---

பலரின் வேண்டுகோளின்படி பல பாஷைகளிலும் புத்தகம் தயாராயிருக்கிறது.

| | |
|---|---|
| இங்கிலீஷ் தமிழ் விலை ரூபாய் 2—0—0 | மலையாளம் இங்கிலீஷ் ரூபாய் 2—0—0 |
| தெலுங்கு இங்கிலீஷ் „ 2—0—0 | இங்கிலீஷ் கன்னடம் „ 2—0—0 |

“ஆனந்த குணபோதினி” அக்ஷய வருஷ சித்திரைமீ 1௳ முதற்கொண்டு வெளிவரும். அதற்குச் சந்தா தாரராக ரூபாய் 1. மணியார்டர் மூலம் அனுப்பி சேருகிறவர்களுக்கு நமது “லேடி டிரேட் மார்க்” ஆங்கில ஆசான் ரூபாய் 1—8—0 மொத்தம் ரூபாய் 2—8—0.

---

## இந்த ரகசியத்தை ஒருவரும் பார்க்கக்கூடாது.

அதிக கஷ்டப்பட்டு கண்டுபிடிக்கப்பட்ட ஜெர்மனி கைத்தொழில் சாத்திரம். முதலில்லாத ஏழைகளே! இதுசமயம் மோசம் போகாதீர்கள். இப்புத்தகம் ஒருவர் கையிலிருந்தால் நாள் 1க்குக் குறைந்தது ரூபாய் ௩ முதல் ௫ வரையில் சம்பாதித்து சுலபமாய் ஜீவிக்கும் அநேக கைத்தொழில் முறைகள் இப்புத்தகத்தில் நிறைந்து கிடக்கின்றன. இதைப்போன்ற சாத்திரம் அதிர்ஷ்டம் உள்ளவர்களுக்குத்தான் கிடைக்கும். சொல்ப காப்பிகளே கைவசமிருக்கின்றன. முந்துங்கள்! முந்துங்கள்!! ஏப்ரல்மீ முடிவுக்குள் ஆர்டர் அனுப்புவர்களுக்கு ரூ. 1—8—0.

ஆனந்தா & Co.,
மேல்வீதி, சிதம்பரம்.

---

## கொக்கோகம்,
அல்லது
### மணவாழ்க்கையின் மர்மங்கள்.
(பல ஒழுங்கான படங்களுடன்)

**விலை ரூ 2—4—0.**

### பண்டிதை மேஸ்மரிஸா
அல்லது
(கப்பற் கொள்ளைக்காரி.)

எல்லாம் காதல்மயம், எல்லாம் அபூர்வம், எலக்டிரிக்மோகம். மின்சார வசியம், அடி, தடி, சொன்னா படிக்கப் படிக்க மிக்க பயங்கரம்.

விலை ரூ 1—8—0.

[illegible]

ஏ. என். ராஜு & கோ.,
50, [illegible] கோவில் வீதி,
[illegible], சென்னை.

---

100-வது காலெண்டர் இனும்! வெளியாகிவிட்டது

## ஆநந்த ராமாயணம்.

9-காண்டங்களுக்கு 109 சருக்கங்கள். 12252 கிரந்தத் தொகையுள்ளது, கிளேஸ் கடிதம் உயர்ந்த பையிண்டுடன் ரூபா 6-0-0 மாதர் நீதி ரூபா 1-0-0.
ஸ்ரீ சாது ரத்ன சற்குரு புத்தகசாலை,
4/34 நயினியப்ப நாயக்கன் வீதி,
பார்க்டவுன், (ஊ) சென்னை.

---

## ஏஜண்டுகள் தேவை.

ஊழியனுக்குச் சந்தா சேர்க்கவும் விளம்பரங்கள் சேர்க்கவும் ஏஜண்டுகள் அங்காங்கு தேவை. தக்க கமிஷன் கொடுக்கப்படும். மற்ற விபரங்கட்குக் காரியஸ்தருக்கு எழுதித் தெரிந்துகொள்ளவும்.
காரியஸ்தர், “ஊழியன்”
காரைக்குடி.

---

லாபம் பெறவேண்டுமானால் ‘ஊழியனில்’ விளம்பரம் செய்யுங்கள்.

## பெட்டர் இயந்திரங்கள் (Engines.)

PETTERS LIMITED YEOVIL

பெட்டரின் தண்ணீர் இறைக்கும் இயந்திரங்களும், விவசாயத்திற்கு உதவும் இயந்திரங்களும், மின்சார வெளிச்ச இயந்திரங்களும் விலை குறைந்[illegible]டிருக்கின்றன. [illegible] இருப்படங்கு செய்யுங்கள்.
விலை குறைவு. சாதாரணம். நம்பிக்கை யுள்ளது.

ஏஜெண்ட்ஸ்:—பெஸ்ட் அண்டு கோ. லிமிடெட்,
இஞ்சினியர்ஸ், போஸ்ட் பாக்ஸ் No. 63, சென்னை.

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

